4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 13—11—73 செவ்வாய் (மலர் 262

## அச்சுதமேனன் மந்திரி சபைக்கு புதிய ஆபத்து

திருவனந்தபுரம், நவ. 11—

கேரளத்தில் முஸ்லீம் லீகில் முகமது கோயா கோஷ்டிக்கும் உமர் பாபகி தங்கள் கோஷ்டிக்கும் கடும் பிளவு ஏற்பட்டுள்ளது.

சண்டை முற்றியதால் பல இடங்களில் ஸ்தாபனத் தேர்தல் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. லீக் எம் எல் ஏக்களிலும் பிளவு ஏற்பட்டுள்ளது. இதனால் அச்சுதமேனன் அமைச்சரவைக்கே ஆபத்து ஏற்படும் என்று கூறப்படுகிறது.

## மேற்கு வங்க வலதுகம்யூ. கட்சியில் பெரும் பிளவு

கல்கத்தா, நவ. 12—

சமீப காலமாக மே.வங்க வலதுகம்யூனிஸ்ட் கட்சியில் ஏற்பட்டிருக்கும் கடுமையான பிளவு வலுவடைந்து விட்டது. சென்ற செவ்வாய்க் கிழமை முடிவடைந்த கட்சியின் மாநிலச் செயற்குழு கூட்டத்திலிருந்து கட்சியின் உயர்மட்டத் தலைவர்களான விஸ்வநாத் முகர்ஜியும், கீதா முகர்ஜியும் வெளியேறி விட்டனர்.

இடதுசாரி சக்திகளுடன் கூட்டு சேராமல் காங்கிரசுடன் இணைந்து செயல்படும் கட்சியின் போக்கு பிடிக்காததால்தான் தாங்கள் வெளிநடப்பு செய்ததாக விஸ்வநாத் முகர்ஜி தெரிவித்தார்.

## விடுதலைப் போராட்டத்தின் சிறந்த பரம்பரை

### கம்யூனிஸ்டுகளின் தியாகவரலாறு பற்றி என். சங்கரய்யா முழக்கம்

மதுரை, நவ. 13—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு, தீக்கதிர், செம்மலர் ஆகியவற்றின் புதிய கட்டிடத்தை நவம்பர் புரட்சிதின நன்னாளில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினரும், இந்தியத்தொழிற்சங்க மையத்தின் பொதுச்செயலாளருமான தோழர் பி ராமமூர்த்தி அவர்கள் திறந்து வைத்தார்.

புரட்சிகர தொழிலாளி வர்க்கத்தின் சொந்தக் கட்டிடம் முழுவதும் பலவண்ண மின் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. கட்டிட வாசல் முன் அமைக்கப்பட்ட அலங்காரப் பந்தலும் குழல் விளக்குகளாலும் செங்கொடி தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

மதுரை நகரிலிருந்தும் மதுரை தாலுகா, மதுரை மாவட்டம் எங்குமிருந்தும் கலந்து கொண்ட தோழர்களும் உழைப்பாளர்களும் திருவிழாக்கால குதூகலத்துடன் தீக்கதிர் திடலில் அமர்ந்திருந்தனர்.

### கட்டிடத் திறப்புவிழா

மதுரை நகரிலிருந்து வந்த ஊர்வலம் பொதுக் கூட்டத்திடலை அடைந்ததும், தோழர் பி. ராமமூர்த்தி புதிய கட்டிடத்தை பலத்த கையொலி வாழ்த்தொலிகளின் மத்தியில் திறந்து வைத்து கட்டிடத்திற்குள் சென்று பார்வையிட்டார்.

கட்டிடத்திறப்பு விழாவுக்கு, கட்சியின் தமிழ் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் தலைமை வகித்தார்.

வேலூர் மருத்துவமனையிலிருந்து தோழர் ஏ. கே. கோபாலனும் மற்றும் பலரும் அனுப்பிய செய்திகள் படிக்கப்பட்டன.

### தோழர் என். சங்கரய்யா

முதலில் தோழர் என்.சங்கரய்யா பேசினார்.

அவர் பேசுகையில் கம்யூனிஸ்டுகள் எவ்வாறு ஏகாதிபத்ய எதிர்ப்பு, சுதந்திரப் போராட்ட பாரம்பரியத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை தக்க உதாரணங்களோடு எடுத்துரைத்தார். அவர் பேச்சின் சுருக்கமாவது:—

இந்தக் கட்டிடம் மதுரை நகருக்கும் மதுரை தாலுகாவுக்கும் நடுமையமாக அமைந்துள்ள இடத்தில் உள்ளது.

நவம்பர் தின நன்னாளில் இத்திறப்புவிழா நடப்பது அனைவருக்கும் மகிழ்ச்சியளிக்கிறது.

செங்கொடியின் லட்சியத்திற்காக உலகமெங்கும் போராடிக் கொண்டிருக்கும் வீரர்களின் லட்சியத்தை நிறைவேற்றுவோமென்று சபதம் எடுத்துக்கொள்ளவே இங்கு நாம் கூடி இருக்கிறோம்.

வேலூர் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் தோழர் ஏ கே. கோபாலன் அவர்களிடமிருந்து வாழ்த்துச் செய்தி கிடைத்துள்ளது.

1940-ம் ஆண்டில் தோழர் ஏ, கே. ஜி. அவர்கள் சேலத்துக்கு வந்து—கம்யூனிஸ்ட் கட்சி தடை செய்யப்பட்டிருந்த அக்காலத்தில்—அப்துல்லா என்ற மாற்றுப் பெயருடன், கம்யூனிஸ்ட் கட்சியை தமிழகத்தில் அமைக்க முனைந்தார்.

மதுரையில் நாகமலை புல்லூத்து என்ற இடத்தில், மதுரை தோழர்களுக்கு ஏ கே ஜி அரசியல் வகுப்பு எடுத்தார். அன்று அவர் போட்ட வித்துதான் இன்று மதுரை மாவட்டமெங்கும் ஆலமரம் போல் விழுதுகள் விட்டும் பெருகி கட்சி வளர்ந்துள்ளது.

தோழர் ஏ கே ஜி சீக்கிரமே பூரண குணமடைந்து தொடர்ந்து தொண்டாற்றுவார் என்று நாம் விரும்புகிறோம்.

### சிறந்த பரம்பரை

சமிழக சட்டமன்றத்தில் 1967ல் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள் 11 பேர் அமர்ந்தோம், எதிரில் 50 காங்கிரஸ் எம் எல் ஏக்கள் அமர்ந்திருந்தனர்.

அந்த காங்கிரஸ் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் தாம் பேசும்போதெல்லாம் தாங்கள்தான் சுதந்திரப்

(4-ம் பக்கம் பார்க்க)

### சி ஐ டி யூ மாநாட்டுக்கு தயாராகின்றனர்

சென்னை, நவ. 7—

சி ஐ டி யூ தமிழ் மாநில மாநாட்டில் கலந்துகொள்ள மாதவரம் பகுதி தொழிலாளர்கள் விரிவான ஏற்பாடுகள் நடத்தி வருகின்றனர்

4—11—73 ஞாயிறு காலை 10 மணிககு தபால் பெட்டி (மாதவரம்) தொழிற்சங்க அலுவலகத்தில் சி ஐ டி யூ மாநாட்டு வரவேற்புக்குழு துணைச் செயலாளரும், மாதவரம் பகுதி தொழிற்சங்கத் தலைவருமான தோழர் சி. கெ மாதவன் தலைமையில் மாதவரம் பகுதி சி ஐ டி யூ தொழிற்சங்கப் பிரதிநிதிகளின் கூட்டம் நடைபெற்றது. கூட்ட ஆரம்பத்தில் சி ஐ டி யூ சென்னை மாநில மாநாடு நடைபெறுவது சம்பந்தமாகவும் மாநாடு சென்னையில் இன்றைய கால கட்டத்தில் நடைபெறும் முக்கியத்துவத்தை பற்றியும் சி கெ மாதவன் பேசினார்

பின்பு மாநாட்டு வேலைகளை ஒழுங்கான முறையில் செய்யவும் மாதவரம் பகுதி முழுவதும் உள்ள தொழிலாளர்களுக்கு மாநாட்டின் முக்கியத்துவத்தை உணர்த்தி மாநாட்டிற்கு தொழிலாளர்களை திரட்டவும் 30 பேர் கொண்ட செயல்கமிட்டி அமைக்கப்பட்டது செயல் கமிட்டியின் கன்வீனர்களாக தோழர்கள் து விராகவன் எஸ் ராபர்ட் ஆகியோரை தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

★ நெல் விலையைக் கூட்டி நிலப்பிரபுக்களுக்கு சலுகை

★ ஒரேயாண்டில் 130 கம்பெனிகளுக்கு ரூ 500 கோடி லாபம்

## இந்திராவின் வறுமை ஒழிப்பு லட்சணம்

### கட்சி, தீக்கதிர் அலுவலக கட்டிடத் திறப்பு விழாவில் பி. ராமமூர்த்தி பேச்சு

மதுரை, நவ. 13—

மக்களுடைய துயரம் பெருகிக்கொண்டிருக்கும் நிலையில் நிலப்பிரபுக்களையும், முதலாளிகளையும் கொழுக்க வைக்கும் கொள்கையை இந்திரா காங்கிரஸ் அரசாங்கம் பின்பற்றுகிறது என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி குற்றம் சாட்டினர். சென்ற ஒரு வருடத்தில் 130 கம்பெனிகள் ரூ 500 கோடி லாபம் ஈட்டியிருப்பதையும், நெல் விலையைக் கூட்டி நிலப் பிரபுக்கள் ரூ. 1000 கோடி வரை லாபம் அடிக்க இந்திரா அரசு உதவியிருப்பதையும் அவர் அம்பலப்படுத்தினர்.



நவம்பர் புரட்சி தினத்தன்று கட்சியின் மாநிலக் குழு அலுவலகத்துக்கும் தீக்கதிர் அலுவலகத்துக்கும் கட்டப்பட்டுள்ள கட்டிடத்தைத் திறந்து வைத்து தோழர் ராமமூர்த்தி உரையாற்றினர். அப்போது அவர் கூறியதாவது:—

நம்முடைய கட்டிடத் திறப்பு விழா நவம்பர் புரட்சி தினத்தன்று நடைபெறுகிறது.

லெனின் காட்டிய வழியை ஞாபகப்படுத்திக் கொண்டு நாம் நம்முடைய பயணத்தைத் தொடருவோம்.

இந்த நூற்றுண்டின் ஆரம்பத்தில் ரஷ்ய நாட்டில் லெனின் போல்ஷெவிக் கட்சியை ஆரம்பித்தபோது அவரை பைத்தியக்காரன் என்று சொன்னார்கள். எங்காவது தொழிலாளி வர்க்க ஆட்சி வருமா என்று கேள்வி கேட்டார்கள். அதற்குப் பின் 20 ஆண்டுகளில் லெனின் உருவாக்கிய ஆட்சியைப் பார்த்து அவர்கள் வாயடைத்துப் போனார்கள், முதலாளிகளும், நிலப்பிரபுக்களும் இல்லாத புதிய சமூகத்தை லெனின் சிருஷ்டித்து காட்டினர்.

இத்தகைய புதிய சமூகத்தைச் சிருஷ்டிக்கும் வழி என்ன? புரட்சியின் மூலம் இது உருவாகிறது என்று கூறும்போது புரட்சி என்ற சொல்லையே இன்று கொச்சைப்படுத்தியிருக்கிறார்கள். இந்திராகாந்தியும் கருணாநிதியும் கூட புரட்சிபற்றி பேசுகிறார்கள்.

லெனின் காட்டிய புரட்சிக்கும் இவர்கள் கொச்சைப் படுத்திக்கூறும் புரட்சிக்கும் சம்பந்தமேயில்லை.

லெனின் அமைத்துள்ள ஆட்சியில் உற்பத்தி சாதனங்கள் எல்லாம் தனியுடைமையில் இல்லை. செல்வாதாரங்கள் எல்லாம் சமூகத்தின் பொதுச் சொத்தாக நிர்வகிக்கப்படுகிறது. சோவியத் யூனியனைப்போல் இன்று உலகில் மூன்றில் ஒரு பங்கு நாடுகளில் சோசலிசக் கொள்கை பின்பற்றப்படுகிறது,

இந்த நாடுகளில் எல்லாம் சூழ்நிலைக்கும் அந்தந்த நாடுகளின் இயல்புகளுக்கும் ஏற்ற மாதிரி புரட்சிப்பாதை உருவாகியது, நம் நாட்டிலும் அவ்வாறு தான் ஏற்படும்,

### மக்கள் மனோநிலை

மூன்று ஆண்டுகளுக்கு முன்பிருந்த மனோநிலையில் இப்போது மக்கள் இல்லை, இந்திரா காந்தியின் மாய்மாலம் மூன்று ஆண்டுகளுக்கு முன் எடுபட்டது. இந்திரா காந்தியால் வறுமையை ஒழிக்க முடியாது என்று அன்று நம கூறிய போது நம்மைப்பார்த்து ஏளனம் செய்தார்கள். இந்திரா காந்தி முற்போக்கு என்று கூறினர்கள்.

இன்றைக்குப் பார்க்கும் போது வறுமையும் வேலையின்மையும் அதிகரித்திருக்கிறது. அதுமட்டுமல்ல 5-வது ஐந்தாண்டுத் திட்டமே நிறைவேற்ற முடியாத நிலைமை ஏற்பட்டுள்ளது. இரண்டு ஆண்டுகளுக்கு முன் ரூ.52ஆயிரம் கோடியுடன் 5-வது திட்டத்தை அமுலாககப் போவதாகச் சொன்னார்கள். இன்று திட்டமிடும் முறையையே கைவிடும் நிலைமை ஏற்பட்டுள்ளது. திட்டத்துக்குப் பணம் திரட்ட முடியவில்லை எங்கே போய்க கடன் கேட்பது என்று திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள்.

### 5 ஆண்டுகளுக்கு முன் கொடுத்த எச்சரிக்கை

நாடு வளரும்போது அதன் மூலப்பொருளைப் பயன்படுத்த வேண்டும். இதை நாடாளுமன்றத்திலேயே நான் உறுப்பினராக இருந்த காலத்தில் வற்புறுத்தினேன். நம் நாட்டில் பெட்ரோல் அதிகம் கிடைக்கவில்லை. ஆகவே நிலக்கரி உற்பத்தியைப் பெருக்காவிட்டால் தொழிற்சாலைகளுக்கு நெருக்கடி ஏற்படும் என்று எச்சரித்தேன். நிலக்கரி உற்பத்தி செய்தால் அனல் மின் நிலையங்கள் மூலம் மின்சாரம் உற்பத்தி செய்யலாம்.

ஐந்து ஆண்டுகளுக்கு முன் நான் விடுத்த எச்சரிக்கை அரசின் காதில் விழவில்லை. இன்று நிலைமை என்ன?

டீசல் எண்ணெயைப் பயன்படுத்தி ரயில்களை ஓட்டியதால் தொழிலாளர்கள் வேலை இழந்தது மட்டுமின்றி இன்று எண்ணெய் கிடைக்காமல் வெளிநாட்டான் காலில் போய் விழ வேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது.

1966-ல் உலக வங்கியிலிருந்து கடன் கிடைக்கிறது என்பதற்காக டீசல் எஞ்ஜின்களை உற்பத்தி செய்வதற்காக அமெரிக்க கம்பெனியுடன் ஒப்பந்தம் செய்யப்பட்டது. இன்று டீசல் எண்ணெய் கிடைக்காமல் தொழில் பாதிக்கப்பட்டுள்ளது.

### நிலப்பிரபுக்களுக்கு சகாயம்

விலைவாசியைக் குறைப்பதற்குப் பதில் இந்த ஆட்சி கூட்டிக் கொண்டேயிருக்கிறது நெல் விலையை குவிண்டாலுக்கு ரூ 53 லிருந்து ரூ 73 ஆக உயர்த்தி விட்டார்கள், இந்த வகையில் 1 டன்னுக்கு ரூ 200 அதிகமாக்கி 4½ கோடி டன் கொள்முதல் செய்வதாக கூறுவதில் சுமார் ரூ 1000 கோடி அதிக லாபத்தை இந்திரா அரசு நிலப்பிரபுக்கள் கையில் கிடைக்கச் செய்துள்ளது. இந்த விலை அதிகரிப்பால் பயனடையப் போவது சிறிய விவசாயிகள் அல்ல. நிலப்பிரபுக்களுக்குத் தான் நெல்லை பதுக்கி வைக்க வசதி இருக்கிறது

எண்ணெய், பருப்பு, புளி எந்தப் பொருளை எடுத்துக் கொண்டாலும் விலை ஏறிக் கொண்டிருக்கிறது. மக்களுக்குத் துன்பம் பெருகிக் கொண்டிருக்கிறது, ஆனால் நிலப்பிரபுக்களுக்கும் முதலாளிகளுக்கும் லாபம் பெருகிக் கொண்டிருக்கிறது.

### 130 கம்பெனிகளின் லாப வேட்டை

சென்ற ஒரு வருடத்தில் நம்நாட்டில் 130 கம்பெனிகள் ஒவ்வொன்றும் சுமார் ரூ. 4 கோடி வீதம் லாபம் பெற்றுள்ளன. அதாவது இந்தக் கம்பெனிகளுக்குக் கிடைத்த மொத்த லாபம் ரூ. 500 கோடியாகும். இந்திரா அரசு நிலப்பிரபுக்களுக்கும், முதலாளிகளுக்கும் அளித்துள்ள சகாயத்தைப் பார்த்தீர்களா?

மக்களை துயரத்துக்கு மேல் துயரத்தில் ஆழ்த்தி வரும் காங்கிரசுக்கு மாற்று சக்தியை உருவாக்க கடந்த இரண்டு வருடங்களாக மேற்கொண்ட முயற்சியில் ஒன்றரை மாதங்களுக்கு முன் மார்க்சிஸ்ட் கட்சி—சோஷலிஸ்ட் கட்சி உடன்பாடு ஏற்பட்டுள்ளது.

இந்த இரண்டு கட்சிகளும் மூன்றுநாள் விவாதித்து உடன்பாடு ஏற்பட்டுள்ளது.

இந்த விவாதத்தில் அடிப்படை விஷயங்கள் எல்லாம் பேசப்பட்டன. அதிகார மாற்றம் ஏற்படுவது

(4-ம் பக்கம் பார்க்க).

## "தீக்கதிர்" காட்டும் பாதையிலே திரண்டு வாரீர் தோழர்களே

### புதிய கட்டிடத்தை நோக்கி பல்லாயிரம் பேர் ஊர்வலம்

மதுரை, நவ. 13—

உலக வரலாற்றின் திருப்புமுனையாம் நவம்பர் புரட்சியின் 56-வது ஆண்டு விழா நாளான 7—11—1973 அன்று, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் தமிழ் மாநிலக்குழு அலுவலகம், தீக்கதிர் அலுவலகம் ஆகியவற்றின் திறப்புவிழா கோலாகலமாக நடைபெற்றது.

தீக்கதிர் கட்டிடத் திறப்பு விழாவை முன்னிட்டு, அன்று மாலை 5 மணிக்கு ஆரம்பமான ஊர்வலத்தில் பொங்கும் உற்சாகத்துடனும் பூரிப்பு மிகுந்தவுடனும் பெருமிதத்துடனும் பல்லாயிரக்கணக்கானோர் கலந்து கொண்டனர். மதுரை நகரிலிருந்தும், மதுரை—முகவை மாவட்டங்களின் பல்வேறு தாலுகாவிலிருந்தும் தோழர்கள் கலந்து கொண்டனர்.

ஊர்வலத்தின் முன்னால் கட்சியின் தமிழ் மாநிலக் குழு செயலாளர் தோழர் ஏ பாலசுப்ரமண்யமும் தீக்கதிர் ஆசிரியர் தோழர் கே முத்தையாவும் தலைமை தாங்கிச் செல்ல—அதிர்வேட்டுகள் இடியோசை எழும்ப வாழ்த்தொலிகள் விண்ணதிர ஊர்வலம் கம்பீரமாகப் புறப்பட்டது.

ஊர்வல முகப்பில் மாதர் சங்கப் பதாகையின்கீழ் தாய்க்குலம் செங்கொடிகளேந்தி உரிமை முழக்கமிட்டுச் சென்றது.

பிறகு இந்திய மாணவர் சங்கப் பதாகையின் கீழ் மாணவ மணிகள் புரட்சி முழக்கங்களை கர்ச்சித்துக் கொண்டு வந்தார்கள்.

மதுரை நகரின் அனைத்து வார்டுகளிலிருந்தும் வந்த தோழர்களும் தொழிலாளர்களும், "தீக்கதிர் காட்டும் பாதையிலே திரண்டு வாரீர் தோழர்களே! செங்கொடி காட்டும் பாதையிலே சேர்ந்து வாரீர் தோழர்களே!"— என்று குரல் உயர்த்தி முழக்கமிட்டு வந்தார்கள்.

மதுரை மாவட்டத்தின் சகல தாலுகாக்களிலிருந்தும் வந்த விவசாயத் தோழர்களும், இராமநாதபுரம் மாவட்டத்திலிருந்து வந்த தோழர்களும் நடுத்தர வர்க்கத்தினரும் ஆயிரக்கணக்கில் அணிவகுத்து வந்தனர், ஆதிக்க வர்க்கங்களை எதிர்த்தும் அடக்குமுறைகளை எதிர்த்தும் கோஷங்களையும் நிலச்சீர்திருத்த கோரிக்கைகளையும் முழக்கி வந்தார்கள்.

போலீஸுக்கு தொண்ணூறு, போலீஸ் நாய்க்கு முன்னூறு—நல்லாலலே நல்லாலலே, நாடாளும் லட்சணம் நல்லாலலே! கருணாநிதி அண்ணாச்சி கருப்பட்டி விலை என்னாச்சி? அன்பழகன் அண்ணாச்சி, அரிசி விலை என்னாச்சி? மாதவன் அண்ணாச்சி, மண்ணெண்ணெய் விலை என்னாச்சி? சத்தியவாணி முத்தம்மா, சர்க்கரை விலை என்னம்மா? துப்புக்கெட்ட சர்க்காரே, உப்பு விலை என்னாச்சி? உழுத்துப் போன சர்க்காரே, உளுந்து விலை என்னாச்சி?—என்பன போன்று விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தாத மத்திய மாநில அரசுகளைக் கண்டித்தும், தியாகிகளுக்கு வணக்கம் செலுத்தியும், குண்டும் சிறையும் குண்டாந்தடியும் செங்கொடி முன்னால் தூளாகும் என்று அடக்குமுறைகளைக் கண்டித்தும், மார்க்ஸிஸ—லெனினிஸம் நீடூழி வாழ்க! தொழிலாளி விவசாயி ஒற்றுமை ஓங்கு! தொழிலாளர்—மாணவர் ஒற்றுமை ஓங்குக! 'இடதுசாரி ஜனநாயக ஒற்றுமையைக் கட்டுவோம்; போன்ற முழக்கங்களையும் உற்சாகமுடன் கோஷித்துக் கொண்டு வந்தார்கள்.

ஊர்வலம் ஹார்வி மில் தொழிலாளர் வசிக்கும் மணிநகரம், ஆரப்பாளையம் பொன்னகரம், கரிமேடு, அரசரடி, சம்மட்டிபுரம் பிபி சாவடி, பெத்தானியாபுரம் வழியாக வைகை பைபாஸ்ரோடு பாலத்தின் வழியாக தீக்கதிர் கட்டிடத்தை நோக்கிச் சென்றது.

வழியில் சம்மட்டி புரத்திலும், பிபி சாவடியிலும்—பெத்தானியாபுரத்திலும் உள்ள தோழர்கள் மூன்று இடங்களிலும் ஒலி பெருக்கிகள் வைத்து, புரட்சி முழக்கங்கள் எழும்பியும், ஊர்வலத்தினரை வாழ்த்துக்கள் கூறியும் வரவேற்றனர்.

செங்கொடி தோரணங்களால் அழகுற அலங்கரிக்கப்பட்டிருந்த வைகைப் பாலத்தின்மீது ஊர்வலம் சென்றுகொண்டிருந்தபோது, பூமியே அதிரும்படியான இடியோசை வேட்டுகள் பராக்கு கூற வண்ண வேடிக்கைகள் ஆகாய வீதியை அலங்கரித்தன.

மார்க்சிஸ்ட் கமயூனிஸ்ட் கட்சியின் மாநிலக் குழுவின் அலுவலகம் தீக்கதிரின் புதிய அச்சகம், செம்மலரின் அச்சகம் ஆகிய அனைத்தையும் ஒருங்கே இணைத்த கம்பீரமான புதிய கட்டிடத்துக்கு ஊர்வலம் சென்றது.

தீக்கதிர் அச்சகத்தின் முன்னால் அமைக்கப்பட்டிருந்த அழகுப்பந்தலில், திறப்பு விழா நிகழ்ச்சிகள் சிறப்புற நடந்தன.

# தீக்கதிர்

## நிக்சன் முன்னுள்ள வழி எது?

அமெரிக்காவின் உப ஜனாதிபதியாக இருந்த அக்னியூ, பதவியை ராஜினாமா செய்துவிட்டார். ஜனாதிபதி நிக்சன் ஏன் இன்னும் ராஜினாமா செய்யவில்லை என்ற கேள்வியே இன்று அமெரிக்க நாடு முழுவதும் ஒலித்து எதிரொலித்துக்கொண்டிருக்கிறது.

இந்த இரண்டுபேரும் இருக்கவேண்டிய இடம் சிறைச்சாலை என்பது அமெரிக்க மக்களின் கோரிக்கையாக எழுந்துள்ளது.

மக்களின் இந்த அபிப்ராயத்தை அமெரிக்கப் பத்திரிகைகள மட்டும் பிரதிபலிக்கவில்லை; நிக்சன் சார்ந்துள்ள குடியரசுக் கட்சியே பிரதிபலிக்கிறது, நிக்சன் மீது எழுந்திருக்கும் கண்டனத்தை அமெரிக்கப் பத்திரிகைகள் பிரதிபலிப்பதைக்கண்டு நிக்சன், பத்திரிகைகள் மீது பாய்ந்துள்ளார். என்ன நேர்ந்தாலும் பதவியை விட்டு விலக மாட்டேன் என்று கொக்கரித்துக்கொண்டு நாற்காலியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருக்கிறார்,

உபஜனாதிபதியாக இருந்த அக்னியூ வரி ஏய்ப்புச் செய்த குற்றத்தை மட்டும் ஒப்புக்கொண்டு 10 ஆயிரம் டாலர் அபராதம் செலுத்தி பதவியை ராஜினாமா செய்ததுடன் தப்பித்துக்கொண்டார். இல்லாவிட்டால் லஞ்சம் வாங்கியதுபோன்ற அவர் மீது எழுந்த பயங்கரக்குற்றசாட்டுக்களுக்குச் சட்டப்படி அவர் அனுபவிக்க வேண்டிய தண்டனை கடுமையானதாக இருந்திருக்கும். அக்னியூ வழியைப் பின்பற்றி அமெரிக்க மக்களின் கண்டனத்திலிருந்து தப்பித்துக் கொள்ளுவதே இப்போதைய நிலைமையில் கௌரவமான வழி என்று நிக்சன் பார்க்கவில்லை.

மக்களுடைய நம்பிக்கையை, தான் இழக்கவில்லை என்று மக்களே உணருமாறு செய்யப் போவதாக நிக்சன் வீரப்புப் பேசியுள்ளார்.

நிக்சன் நடவடிக்கைகள் எப்படி இருக்கின்றன?

அவருடைய ஒவ்வொரு நடவடிக்கையும் மக்களுடைய நம்பிக்கையை வளர்ப்பதற்குப் பதில, அவரை விரட்டியடிக்க வேண்டும் என்று கோபாவேசத்தை மூட்டி வருகிறது.

வாட்டர்கேட் ஊழலில் சம்பந்தப்பட்டிருப்பது மட்டுமின்றி—அந்த ஊழலை மறைப்பதில் பங்கு பெற்றிருந்தது மட்டுமின்றி — நிக்சனின் மோசடிகளையெல்லாம் ஒவ்வொன்றாக நீதித்துறை அம்பலப்படுத்தியுள்ளது.

தன்னுடைய அரசியல் எதிரிகளை வீழ்த்துவதற்காக உளவு இலாகாவை நிக்சன் படு கேவலமான முறையில் பயன்படுத்தியிருக்கிறார்,

வருமான வரியை ஏய்த்திருக்கிறார்,

ஜனாதிபதி அதிகாரத்தைப் பயன்படுத்தி சொத்து சேர்த்திருக்கிறார்.

இந்த மோசடிகள் ஒவ்வொன்றாக வெளிப்பட்டு வரும்போது—தன் மீது மக்களுக்கு நம்பிக்கை ஏற்படும் என்று நிக்சன் மனப்பால் குடிக்கிறார். கடைசியாக வாட்டர்கேட் ஊழலை மறைக்கும் முயற்சியில் நிக்சனுக்குப் பங்கு இருந்ததா இல்லையா என்பதை நிரூபிப்பதற்கான ஒலிப்பதிவு நாடாக்களையே மறைத்திருப்பது கால்தூசிக்குக்கூட மதிப்பில்லாத பேர்வழி என்று நிக்சனை உலகுக்கு அம்பலப்படுத்திவிட்டது,

நிக்சன் பதவி விலகக் கோரும் இயக்கத்தை 2 கோடி உறுப்பினர்களைக் கொண்ட அமெரிக்க தொழிலாளர்கள் சம்மேளனம் தொடங்கியுள்ளது.

ஸ்தல ஸ்தாபனத் தேர்தலில் நிக்சன் கட்சி (குடியரசு கட்சி) தோல்வி கண்டிருப்பதும் நிக்சனுடன் குடியரசு கட்சியும் அதல பாதாளத்துக்குள் போய்க்கொண்டிருப்பதை எடுத்துக் காட்டுகிறது.

கடைசியாக போர் நடத்துவதற்கான ஜனாதிபதியின் அதிகாரத்தைப் பறிக்கும் மசோதா மீது நிக்சனின் ரத்து அதிகாரத்தை மூன்றில் இரண்டு பங்குக்கும் மேலாக ஓட்டுகள் போட்டு அமெரிக்கக் காங்கிரஸ் முறியடித்திருப்பது நிக்சனுக்கு எச்சரிக்கையாக வந்துள்ளது.

வாட்டர்கேட் ஊழலையும் நிக்சனின் பங்கையும் இன்று குடியரசு கட்சியைச் சேர்ந்த தலைவர்களே கண்டிக்கத் தொடங்கியுள்ளனர். இக்கண்டனத்தை நாடாளுமன்றத்துக்குள்ளும் எதிரொலிக்கும் முறையில் பிரதிநிதிகள் சபையைச் (கீழ்சபை) சேர்ந்த 86 குடியரசு கட்சி உறுப்பினர்களும் செனட் சபையை(மேல் சபை)சேர்ந்த25 குடியரசு கட்சி உறுப்பினர்களும் நிக்சனின் ரத்து அதிகாரத்தை முறியடிக்கும் மசோதாவை ஆதரித்து ஓட்டுப் போட்டுள்ளனர்.

அமெரிக்க மக்களின் நம்பிக்கையை அடியோடு இழந்துவிட்ட நிக்சனை ஆதரிப்பது தங்களுடைய கட்சிக்கே ஆபத்து என்று குடியரசு கட்சியில அபிப்பிராயம் மேலோங்குவதையே இந்த ஓட்டெடுப்பு வெளிப்படுத்தியுள்ளது.

நிக்சன் மீது கண்டனத் தீர்மானம் நிறைவேற்றி பதவி விலகச் செய்வதற்கு அமெரிகக காங்கிரசில்போதிய பலம் திரளும் என்பதையே இந்த ஓட்டெடுப்பு உணர்த்துகிறது.

கண்டனத் தீர்மானம் நிறைவேற்றி தங்களுடைய கட்சியைச் சேர்ந்த ஜனாதிபதியை நீக்குவதன் மூலம் கட்சிக்கு அதிக சேதம் ஏற்படுமா அல்லது நிக்சனைப் பதவியில் நீடிக்கச் செய்வதன்மூலம் அதிகச் சேதம் படுமா என்ற கேள்வியே குடியரசுக் கட்சியின் முன் நிற்கிறது,

மக்களுக்கு நிக்சன்மீது நம்பிக்கை முழுவதும் போய்விட்டது என்பதை யாராலும் மறுக்க முடியாமல் இருக்கும்போது பெரும் கேள்விக்குறியாகிவிட்ட நிக்சன் பதவியில் ஒட்டிக்கொண்டிருப்பதைப் பார்க்கிலும் கேவலமான செயல் வேறு எதுவும் இருக்க முடியுமா?

---

சம்பள உயர்வு முதலிய கோரிக்கைகளை வலியுறுத்தி

## ஆர்ப்பாட்டம்--உண்ணாவிரதம்

### டான்சி தொழிலாளர் பிரதிநிதிகள் அறைகூவல்

ஜனவரியில் சிறப்பு மாநாடு

மதுரை, நவ 12—

சம்பள உயர்வு உட்பட 17 அம்சக் கோரிக்கைகளை வற்புறுத்தி தமிழகம் முழுவதும் இம்மாதம் 15ந்தேதியன்று ஆர்ப்பாட்டங்களும், டிச 10, 11, 12-ந் தேதியில் உண்ணாவிரதம் போராட்டமும் நடத்துவது என்றும் ஜனவரி 3வது வாரத்தில் சென்னையில் சிறப்பு மாநாடு ஒன்று நடத்துவது என்றும் டான்சி தொழிலாளர் சம்மேளனப் பிரதிகள் முடிவு செய்துள்ளனர்.

கடந்த 4-ந் தேதி மதுரையில் நடந்த தமிழ்நாடு சிறு தொழில் நிறுவனத் தொழிலாளர் சம்மேளனப் பிரதிநிதிகள் கூட்டத்தில் இம்முடிவு எடுக்கப்பட்டது

இக்கூட்டத்தில் கடந்த 20—8—73 அன்று திருச்சியில் எடுத்த முடிவுகள்பற்றியும் 1—10—73—ல் நடந்தேறிய அடையாள வேலை நிறுத்தம், அதன் பிறகு எழுந்துள்ள நிலைமைகளையும சம்மேளனப் பிரதிநிதிகள் ஆராய்ந்தனர் கூட்டத்திற்கு தோழர் எம். காசிநாதன் தலைமை வகித்தார். சென்னை, வட ஆற்காடு, தென் ஆற்காடு தஞ்சை, திருச்சி, கோவை, சேலம், மதுரை, ராமநாதபுரம் மாவட்டங்களிலிருந்து 25 பேருக்கு மேல் டான்சி தொழிற் சங்கப் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

சம்மேளனச் செயலாளர் தோழர் சி. பி, தாமோதரன் 20-8-73ந் தேதி திருச்சி முடிவுக்கு பிறகு நடந்த இயக்க வேலைகளை சம்பந்தப்பட்ட அறிக்கையை சமர்ப்பித்தார்.

அந்த அறிக்கையின் மீது 14க்கு மேற்பட்ட டான்சி தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கலந்துகொண்டு பேசினர். அவர்கள், தங்களது யூனிட்டுகளில் ஏற்பட்டுள்ள நிலைமை பற்றியும் எதிர்கால வேலை திட்டம் மற்றியும் ஆலோசனைகளை முன்வைத்தனர். விவாதத்தில், திண்டுக்கல் பீட்டர், குடந்தை வெங்கிடாசலம், சென்னை வரதராஜன், திருப்பூர் அப்துல், மேட்டூர், பெருமாள்சாமி, பழனி, டி. பாலசுப்பிரமண்யம், சேலம் பொன்னுசாமி, சென்னை ராமச்சந்திரன், திருச்சி சதாசிவம், மதுரை சந்திரன், சென்னை இருளாண்டி, குடந்தை நீலமேகம், ஈரோடு சந்திரன், திருச்சி காசிநாதன் முதலிய தோழர்கள் பங்குகொண்டனர்.

விவாதத்திற்கு பின் நடவடிக்கை குழு உறுப்பினர் தோழர் ஏ நல்லசிவன், தொழிலாளர்கள் கோரிக்கை வைத்து போராடியபோது, டான்சி நிர்வாகம் ஒரு பினாமி சங்கத்துடன் பேச்சுவார்த்தை நடத்தி தொழிலாளர்களது உரிமைகளை பறிக்க முயல்வதை பல்வேறு உதாரணங்களுடன் விளக்கிப் பேசினார். பெருவாரியான தொழிலாளர்களை பிரதிநிதித்துவப்படுத்தும் சம்மேளனத்துடன் பேசாமல், போலியான மைனாரிட்டி சங்கத்தைச் சிருஷ்டித்து, உரிமைகளை முடமாக்க நினைக்கின்றனர்.

டான்சி நிர்வாக இயக்குனரின் இந்தப் போக்கை முறியடிக்கவேண்டும். தனித்தனியாக யூனிட் வாரியாக பேசாமல் சம்பள உயர்வு உட்பட சம்மேளனம் முன்வைத்துள்ள 17 அம்ச கோரிக்கையின் பேரில் பேச்சுவார்த்தை நடத்த நிர்வாக இயக்குனரை நிர்ப்பந்திக்கவேண்டும். பிச்சை சலுகைகளை கொடுத்து தனியாக யூனிட்டில் பேச செய்யப்படும் முயற்சி பற்றி தொழிற் சங்கங்கள் உஷாராயிருக்க வேண்டும் என்றார்.

#### தந்திகள்-ஆர்ப்பாட்டம்

கடைசியாக கீழ்க்கண்ட முடிவுகளும், தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

17 அம்சக் கோரிக்கைகள் குறித்து சம்மேளத்துடன் பேச்சுவார்த்தை நடத்தவேண்டும் என்று வற்புறுத்தி நவ 15-ந்தேதி ஒவ்வொரு டான்சி யூனிட்டும், லேபர் கமிஷனர் நிர்வாக இயக்குனர், தொழிலாளர் அமைச்சர் ஆகியோருக்கு தந்திகள் அனுப்ப முடிவு செய்யப்பட்டது. மேலும் அன்று தொழிலாளர்கள் கோரிக்கை ஆர்ப்பாட்டம் நடத்தி மகஜர் ஒன்றை சம்பந்தப்பட்ட ஸ்தலத்தில் உள்ள மாவட்ட ஆட்சித்தலைவர், ஆர் டி ஓ ஆகியோரிடம் மகஜர் சமர்ப்பிப்பது என்றும் முடிவு செய்யப்பட்டது.

மேலும் நிர்வாகம் பேச்சுவார்த்தைக்கு இணங்காவிடில், டிசம்பர் 10, 11, 12 தேதிகளில் சம்பந்தப்பட்ட டான்சி யூனிட் தொழிலாளர் 3 நாள் தொடர் உண்ணாவிரதம் இருப்பது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

#### சென்னையில் மாநாடு-ஆர்ப்பாட்டம்

ஜனவரி 3-வது வாரத்தில் சென்னையில் சிறப்பு மாநாட்டினை நடத்துவதென்றும் தமிழ்நாடு பூராவும் உள்ள டான்சி தொழிலாளர்கள் அன்றே சென்னையில் சிறப்பு மாநாட்டு அன்றே ஆர்ப்பாட்டம் ஒன்றை நடத்துவது என்றும் முடிவு செய்யப்பட்டது.

இதற்கிடையில் பிரச்னைக்கு தீர்வு காண நிர்வாக மறுத்தால் பிப்ரவரியில் நேரடி நடவடிக்கை பற்றி மாநாட்டில் முடிவு செய்வது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

கரூர் டான்சி தொழிற் சங்க உறுப்பினர் தோழர் வீரமலை, மின்சாரம் தாக்கி அகால மரணமடைந்தது குறித்து, சம்மேளனப் பிரதிநிதிகள் அஞ்சலி செலுத்தினர். அன்னாருடைய குடும்பத்திற்கு அனுதாபம் தெரிவிக்கப்பட்டது.

---

பம்பாய் நகரம் கிடுகிடுத்தது

## வேலைநிறுத்தம் செய்த 30 ஆயிரம் இஞ்சினியரிங் ஊழியர் ஊர்வலம்

பம்பாய். நவ. 11—

பம்பாய் நகரத்திலும் அதன் சுற்றுப்புறங்களிலும் உள்ள 150 எஞ்சினியரிங் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் 30 ஆயிரத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் நவ 10-ந் தேதி கட்டுப்பாடான, உறுதிமிக்க ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்தனர்.

மகாராஷ்டிர மாநில காங்கிரஸ் அரசாங்கத்தின் அடக்குமுறைக் கொள்கைகளுக்கும் தொழிலாளர் விரோதக் கொள்கைகளுக்கும் தொழிலாளர்களின் எதிர்ப்பை வெளிப்படுத்தும் முறையில் இந்த வேலை நிறுத்தம் நடைபெற்றது,

இந்த வேலை நிறுத்தம் நடைபெற விடாமல் தடுக்க அரசாங்கம் மேற்கொண்ட உருட்டல் மிரட்டல்களையெல்லாம் துச்சமாக மதித்து தொழிலாளர்கள் வீராவேசம் கொண்டெழுந்தனர்.

இந்த வேலை நிறுத்தத்திற்கு சிஐடியூ வுடன் இணைந்துள்ள எஞ்சினியரிங் தொழிலாளர் சங்கம் அறைகூவல் விடுத்திருந்தது;

வேலை நிறுத்தம் செய்த எஞ்சினியரிங் தொழிலாளர்கள் வட பம்பாயிலிருந்து மத்திய பம்பாயிலுள்ள தொழிலாளர் கமிஷனர் அலுவலகத்திற்கு பம்பாய் நகரத்தையே கிடுகிடுக்கச் செய்த கோஷங்களை எழுப்பிக்கொண்டு ஊர்வலமாகச் சென்றனர். தொழிலாளர் கமிஷனரை தொழிலாளர்களின் பிரதிநிதிகள் குழு ஒன்று சந்தித்துமனு ஒன்றைக்கொடுத்தது.

மாநில அரசாங்கத்தின் அடக்குமுறைக் கொள்கையினை உடனே நிறுத்த வேண்டும் என்றும் கைது செய்யப்பட்டிருக்கும் தொழிற்சங்கத் தலைவர்களையெல்லாம் விடுதலை செய்ய வேண்டும் என்றும் வேலை நிறுத்தங்களுக்கு உடனடியாகத் தீர்வுகாண வேண்டும் என்றும் அந்த மனுவில் கோரப்பட்டிருந்தது.

---

## தோழர் நாராயண்ராய் மரணம்

கல்கத்தா நவ,6—

மேற்குவங்க மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களில் ஒருவரான தோழர் டாக்டர் நாராயண் ராய் 1-11-73-ல் இங்கு காலமானார். தோழருக்கு 73 வயதாகிறது.

1967 வரையிலும் தோழர் ராய், மேற்கு வங்க சட்டசபை உறுப்பினராக இருந்திருக்கிறார்.

சுதந்திரப் போராட்ட காலத்தில் 15 வருடசிறைத் தண்டனை அனுபவித்தவர் தோழர் நாராயண்ராய்.

---

குமரி மாவட்ட அரசுப் போக்குவரத்து தொழிலாளர்கள் 15—10—73 முதல் நியாயமான கோரிக்கைகளுக்காக போராடி வருவதை இந்த பிரச்னையில் ஆதரவும்தமிழக அரசின் தொழிலாளர் விரோதப் போக்குக் கண்டனமும் தெரிவிக்கப்பட்டது.

மேலும் குமரி மாவட்ட அரசு போக்குவரத்து தொழிலாளர்கள் பிரச்னையில தமிழக அரசு உடனடியாக சங்கத்துடன் நேரடி பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காண வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டது.

இந்திய அரசு சாதாரண ஏழை எளிய மக்கள் உபயோகப்படுத்தும் மண்ணெண்ணெய் விலையை உயர்த்தியுள்ளதை வன்மையாகக் கண்டனம் செய்கிறது. உடனடியாக மண்ணெண்ணெய் விலை உயர்வை ரத்து செய்ய வேண்டும் என்று இந்திய அரசை இக்கூட்டம் வற்புறுத்துகிறது.

சம்மேளனத்தைப் பலப்படுத்தவும் இதர யூனிட்டுகளுடன் தொடர்பு கொள்ளவும், தொழிற்சங்கப்பிரதிநிதிகள், மாவட்ட வாரியாக பொறுப்புகளை மேற்கொண்டன.

---

கையிருப்பு கிரோசின் முழுவதையும் லிட்டர் 72 பைசாவுக்கே வழங்க

## மயிலம் பொதுமக்கள் போராட்டம் வெற்றி

மயிலம், நவ. 11—

மயிலம் (தென் ஆற்காடு) கிராமத்துக்கும், சுற்றுவட்டாரத்தில் சுமார் 20-க்கு மேற்பட்ட குக்கிராமங்களுக்குமாகச் சேர்த்து மக்களுக்குத் தேவையான அத்தியாவசியப் பண்டங்களை வாங்கி விநியோகம் செய்யும்பொறுப்பை தன்கையில் வைத்துள்ள இங்குள்ள நான்கு பெரிய மளிகைக்கடைகள் கெரஸின் விநியோகம் செய்யும் பொறுப்பையும் ஏற்று வந்திருக்கின்றன,

மத்திய அரசு கொடூரமான முறையில் கெரஸின, பெட்ரோலுக்கு எக்ஸைஸ் வரி விதித்த செய்தியை 3-ந் தேதி சனிக்கிழமை காலை பத்திரிகையில் பார்த்த மறுவிநாடியே இம்மளிகைக் கடை வியாபாரிகளும் அரசாங்கத்தோடு சேர்ந்துகொண்டு கெரஸின் லிட்டர் ரூ. 1 என்று விற்கத் தொடங்கினர்.

கிராமப் பொதுமக்கள் சிலர், ஏற்கனவே இருப்பு உள்ள, கெரஸினை நியாயமாக 72 பைசாஎன்று விற்க வேண்டும் என்றும் இப்படி அநியாயமாக 1 ரூ என்று விற்கலாமா என்றும் கேட்டதற்கும் வியாபாரிகளிடமிருந்து முறையான பதில் இல்லை,

இந்த சந்தர்ப்பத்தில்கிராமத்தில் கடந்த சில மாதங்களாக செயல்பட்டு வரும் சில முற்போக்கு எண்ணமும் ஆர்வமும் உடைய இளைஞர்களின் ஸ்தாபனமான 'இளைஞர் நற்பணி மன்றம்' இந்த விவகாரத்தில் தலையிட்டது.

'மண்ணெண்ணெய் விலை உயர்வுக்கு மத்திய அரசு தான் காரணம் என்றாலும் பழைய கையிருப்பு எண்ணெய் தீருகிற வரைக்கும் பழைய விலைக்கே விற்கப்பட வேண்டும்' என்ற கோரிக்கையை முன்வைத்து, கிராமம் பூராவும் தெருத் தெருவாகப் பிரச்சாரம் செய்து மக்களைத் திரட்டியது.

மக்கள் காலிபாட்டில்கள், டின்கள், சொம்புஎன்று கையில் கிடைத்ததை எடுத்துக் கொண்டு இளைஞர் நற்பணி மன்றத்தின் பின்னால் அணி திரண்டார்கள். ஊர்வலமாக வந்து கடைகளை முற்றுகையிட்டார்கள்,

முதலில் பணிய மறுத்த வியாபாரிகள், பொதுமக்களின் ஆவேசத்துக்குப் பணிந்து, முதலில் ஆளுக்கு தலா ½ லிட்டர், 1 லிட்டர் என்று தொடங்கி, பிறகு இருப்பு எண்ணெய் சுமார் 15 பாரலையும் (3,000 லிட்டரையுமே) லிட் 72 பைசா வீதம் பழைய விலைக்கே கேட்ட அளவு கொடுக்க ஒப்புக்கொண்டனர்.

பொதுமக்களிலேயே சந்தேகத்தோடும், அவநம்பிக்கையோடும் இருந்த சிலரும் விஷயம் அறிந்து திரள் திரளாக கடையை நோக்கி குவிந்தவண்ணம் இருக்கவே வியாபாரிகள் மற்ற வியாபாரத்தையெல்லாம் நிறுத்தி வைத்து எண்ணெய் தீருகிறவரைக்கும் வெறும் கெரஸினையே தொடர்ந்து 2 நாளாக வியாபாரம் செய்ய வேண்டியதாயிற்று

கூடவே இளைஞர் நற்பணி மன்றம் பழைய ஸ்டாக்கை விநியோகிக்கச் செய்வதில் இந்த மாதிரி நடவடிக்கைகள் எடுத்தது போல்இப்படி விலை ஏற்றத்துக்குக் காரணமான மத்திய அரசின் கொள்கைகளையும் இதேபோல் எதிர்க்கவேண்டும் என்றும் அப்படிப்பட்ட எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்கள், ஊர்வலங்களுக்கு ஒத்துழைத்து அப்படிப்பட்ட இயக்கங்களோடு நம்மைப்பிணைத்துக் கொள்வதிலும் இதே போன்ற ஒற்றுமையுடனும் கட்டுக்கோப்புடனும் நாம் செயல்படவேண்டும் என்றும் நிலைமையை மக்களுக்கு விளக்கி பிரசாரம் செய்து ஒற்றுமை காக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டனர்,

---

## ஆசிரியருக்கு...

### மாதவரம் நகரியத்தில் குடிதண்ணீர் பஞ்சம் தீருமா?

ஐயா,

திமுக அரசால் நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட மாதவரம் நகரியத்தில் அப்பகுதி மக்கள், குடிதண்ணீருக்காக மிகவும் நெருக்கடிக்குள்ளாகியுள்ளனர்.

குழாய்கள் என்ற பெயரால் வழங்கப்பட்டுவரும் தண்ணீரும் ஒழுங்கான முறையில் விநியோகம் செய்வது கிடையாது. தண்ணீர் சப்ளை செய்யும் மிஷின் அடிக்கடி ரிப்பேர் ஆகி குழாய்களில்தண்ணீர் வருவது கிடையாது.மேலும் குழாய்கள்எல்லாம் ஓட்டையாக இருப்பதால் தண்ணீரும் சீராக வராமல் நின்று நின்று வருவதால் தாய்மார்கள் தண்ணீர் இல்லாமல் காலி குடங்களுடன் திரும்புகின்ற நிலை ஏற்படுகின்றது.

குழாய்கள் இல்லாத பகுதிகளில் வண்டிகளில் தண்ணீர் வழங்கப்படுகிறது ஆயிரககணக்கான மக்கள் வசிக்கும் இப்பகுதிகளில் 3 வண்டிகளில் மட்டுமே துப்புரவுத் தொழிலாளர்களைக் கொண்டு வழங்கப்படுகின்றது. ஒரு நாளைக்கு ஒரே ஒரு முறை மட்டும் ஒரு பானை தண்ணீர் வினியோகம் செய்யப்படுகின்றது.

மேலும் வாரத்தில் ஐந்து அல்லது ஆறு நாட்கள் அவர்கள்விரும்புகின்ற நேரங்களில் மட்டுமே தண்ணீர் வழங்கப்படுகின்றது.

அரசியல்காரணங்களால் சில பகுதிகளில்இந்தமுறையும் இல்லாமல் தண்ணீர் தராமல் இருக்க திமுக நகரிய உறுப்பினர்கள் செயல்படுகின்றனர். இதனால் தாய்மார்கள் மாதவரத்திலிருந்து 1 மைல் தொலைவில் தனியாருக்கு சொந்தமான கிணறுகள் உள்ள இடத்தில் சென்று அன்றாடம் குடிதண்ணீர் கலயில் சுமந்து வரும் கொடுமையான நிலை தொடர்ந்து நீடிக்கின்றது.

இக்கொடுமைக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என்று மார்க்சிஸ்ட் கட்சி தலைமையில் பெண்கள் காலி குடங்களுடன் நகரிய அலுவலகத்திற்கு ஊர்வலமாகச் சென்று அதிகாரியிடம் மகஜர் கொடுத்தனர். ஆனால் இதுவரை இப்பிரச்சினையில் தீர்வு காண்பதற்கு நிர்வாகமும் திமுக உறுப்பினர்களும் எந்த ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை.

நகரிய துணைத்தலைவராக உள்ள திமுக வட்டச் செயலாளரும் அலுவலகத்திற்கு வந்து மக்களின் குறைகளை அறிந்து தீர்க்க முயற்சிப்பதில்லை அலுவலகம் வராமலே பெயருக்கும் புகழுக்கும் மட்டும் இப்பதவியில் ஒட்டிக்கொண்டிருக்கிறார்.

அரசோ, பஞ்சாயத்தாக இருந்து இந்நகரியத்திற்கு தேர்தல் வைத்தால் நம கட்சிக்காரர்களை மக்கள் தேர்ந்தெடுக்கமாட்டார்கள் என்பதற்காக தேவையில்லாதுதொடர்ந்து நகரியமாகவே இருக்கச் செய்து தன் கட்சிக்காரர்களின் வாழ்க்கையை வசதிசெய்து கொடுக்கும் போக்கில இருந்து வருகின்றது.

ஆகவே உடனடியாக குடிதண்ணீர் பிரச்சினைக்கு நகரியம் ஒழுங்காக செயல்படாத நிலை தொடர்ந்து நீடித்தால் மார்க்சிஸ்ட்கட்சி மக்களை திரட்டி மாபெரும் கிளர்ச்சிக்கு தயாராகும் என தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இப்படிக்கு

எஸ். ராபர்ட்

துணைச்செயலாளர்

மார்ச்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி

மாதவரம் நகரக்கிளை

---

தாராபுரம் தாலுகா

## மூலனூர் போலீசாரின் துக்ளக் தர்பார்

தாராபுரம். நவ. 11—

தாராபுரம் தாலுகா மூலனூரில் கடந்த 15 நாட்களுக்கு முன்பு சப் இன்ஸ்பெக்டர்தலைமையில் போலீசார், இரண்டாவது ஆட்டம் சினிமா பார்த்து விட்டு வந்த பொதுமக்களை வழிமறித்து எந்தவித அறிவிப்புமில்லாமல் திடீரென்று கண்மூடித்தனமாக தாக்கியுள்ளனர். இதனால் பலருக்கு காயங்கள் ஏற்பட்டுள்ளன,

இது மட்டுமல்லாமல் மூலனூரில் இருந்து பக்கத்து கிராமங்களுக்கு சினிமா பார்த்துவிட்டுச் சென்று கொண்டிருந்த விவசாயத் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்ததோழர்களையும், பெண்களையும், வழிமறித்து கண்மூடித்தனமாக போலீசார் தாக்கியுள்ளனர். இத்தாக்குதலால்சங்கத்தோழர் ஒருவர் பலத்த அடிபட்டுள்ளார்.

இப்படிபோலீசார்இருட்டு நேரத்தில் திடீரென்று தாக்கியதால் பெண்கள் பயந்து முள் வேலிகளை எல்லாம் தாண்டிஓடி—மறுநாள்காலையில்தான் வீடு வந்து சேர்ந்தனர். பயந்ததின் விளைவாக கடுமையான காய்ச்சலுக்கும், சுகவீனத்துக்கும் ஆளாகியுள்ளனர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தாலுகா கமிட்டி செயலாளர் தோழர் டி பி. முத்துசாமி தலைமையில் பொதுமக்கள் கூட்டமாக போலீஸ் நிலையம் சென்று இதைப் பற்றிக் கேட்டபோது, போலீசார் இந்த ஊரில் திருடு போய்விட்டது. ஆகவே தான் அவ்வாறுசெய்தோம்,என்று பதிலளித்தனராம். இனி மேல்இவ்வாறு நடக்காமல் பார்த்துக் கொள்கிறோம் என்றும் கூறினராம்.

ஊரில் திருட்டு போய்விட்டது என்பதற்காக திருடர்களை பிடிக்க கையாலாகாத போலீசார் சினிமா பார்த்து விட்டு வந்த பொதுமக்களை கண்மூடித்தனமாக தாக்குவது எந்த வகையில் நியாயமானதாக இருக்க முடியும் என்று பொதுமக்கள் மத்தியில் கேள்விக் குறியை உண்டு பண்ணியுள்ளது.

---

## மத்திய கமிட்டிக் கூட்டம்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் மத்தியக் கமிட்டிக் கூட்டம் வருகிற நவம்பர் 22-ம் நாள் காலை 10-30 மணிக்கு கல்கத்தாவிலுள்ள கயத்நாலாவில் துவங்கும நவ 27 முடிய நடைபெறும்.

இந்தக் கூட்டத்தில்

1. விவசாய இயக்க தஸ்தாவேஜ்கள் இறுதிப்படுத்துதல்
2. அரசியல் தீர்மானம்.
3. தத்துவார்த்த தஸ்தாவேஜ்கள்
4. இதரவிஷயங்கள்- ஆகியவை பற்றி விவாதித்து முடிவு எடுக்கப்படும்.

# தனியார் பள்ளிகள் கட்டுப்பாடு மசோதாவை உடனே சட்டமாக்குக

(கல்வி அரங்கில் தனியார்துறை அறவே ரத்து செய்யப்பட்டு, கல்வி கற்பிப்பது சம்பந்தமான சகல பொறுப்புகளையும் அரசே மேற்கொள்ள வேண்டும் என்பது தான் நம் கட்சியின் நிலை. என்றாலும், தமிழகத்தில் ஜனநாயக இயக்கம் போதிய வளர்ச்சி பெற்றிராத இன்றைய சூழ் நிலைமையில், தனியார் துறையினரை ஓரளவு கட்டுப்பாட்டுக்குள்ளாவது வைப்பதற்கு தமிழக அரசின் மசோதா வசதி செய்வதாக தொடக்கப் பள்ளி ஆசிரியர்களில் கணிசமான பகுதியினர் கருதுவதைத் தான் தோழர் வி. ராமுண்ணி அவர்கள் பின் கண்ட கட்டுரையில் பிரதி பலிக்கிறார்கள்என்று கருதி, அவருடைய கட்டுரையை கீழே பிரசுரித்துள்ளோம்.)

—ஆசிரியர்

**வி. ராமுண்ணி**

தனியார் பள்ளிகளில் பணியாற்றும் ஆசிரியர்கட்குப் பணிப் பாதுகாப்பு கொடுக்க வேண்டுமென்ற கோரிக்கையை 1934-ல் இருந்தே வற்புறுத்தி வந்திருக்கின்றோம். 1946-ல் மாநிலக் கூட்டணி நிறுவியதிலிருந்தே அதன் எல்லா மாநில மாநாடுகளிலும், தனியார் தொடக்கப் பள்ளிகளில ஆசிரியர்கட்குப் பணிப்பாதுகாப்புகொடுக்காதது போன்ற பல குறைகளையும் சுட்டிக் காட்டி, அக்குறைகளை தீர்க்கவே எல்லா தொடக்கப்பள்ளிகளையும் அரசு நேரடியாக ஏற்று நடத்தவோ அல்லது அதற்கான ஒரு வாரியம் அமைத்து எல்லா தொடக்கப் பள்ளிகளையும் அவ்வாரியத்தின் கீழ் கொண்டு வர வேண்டுமென்றே தீர்மானம் நிறைவேற்றி அரசுக்குப் படைத்ததுமல்லால் அதை ஓர் இயக்கமாகவும் நடத்தி வந்திருக்கின்றோம்.

### ஊழல் ஊழல்

தனியார் பள்ளிகளில் ஓர் ஆசிரியர் நியமிக்கப்ப வேண்டுமானால் ரூ500 முதல் ரூ2000 வரை 'நன்கொடை" அளித்தல், அரசு ஆசிரியர்கட்குக் கொடுக்கும் மாதச் சம்பளத்திலிருந்து ரூ5 லிருந்து 50 வரை பிடித்தம் செய்தல், நிர்வாக மானியம் அதிகம் கிடைப்பதற்கு அதிக ஆசிரியர்களை நியமனம் செய்ய ஆஜர் பட்டியலில் வராத பிள்ளைகட்கு எல்லாம் ஆஜர் போடுவது, தங்கள் விருப்பத்திற்கு மாறான செயல்களை செய்ய வற்புறுத்துவது இதை மறுக்கும்போதோ, தங்களின் சுயநலத்திற்காக தாம் விரும்பும் ஆசிரியரை நியமிக்கத் தேவைப்படும் போதோ, மற்றும் சில காரணங்களுக்காகவோ வெளியேற்றுவது போன்ற சொல்லிலடங்கா கஷ்டங்களை தனியார் பள்ளியில் வேலைசெய்யும் ஆசிரியர்கள் தினமும் அனுபவித்து வருகிறார்கள்.

ஆசிரியர்களின் இந்தக் குறைபாடுகளைப் போக்க நீண்ட நாட்களாக அரசு எவ்வித சட்ட திட்டங்களையும் விதிகளையும் ஏற்படுத்தவில்லை. அனரும் அனுபவித்து வரும் துயரங்களை ஆசிரியர் கூட்டணி இடைவிடாது அரசின் கவனத்திற்கு பல்லாண்டுகளாக கொண்டுவந்ததன் பயனாக "ஆரம்பப் பள்ளிகளுக்கான விதிகள்" என்ற ஒன்றை அரசு வெளியிட்டது. இதை இயற்றிப்பல ஆண்டுகள் ஆகிவிட்ட போதிலும் இதனால் ஏற்படும் நன்மைகளை ஆசிரியர்கள் அனுபவிக்க முடியவில்லை. காரணம் இந்த விதிகள் சட்ட பூர்வமானதாக ஆக்கப்படவில்லை.

### நீதிமன்றம் நிர்வாகிகளுக்காகவா?

ஆசிரியர்களுக்கு ஓரளவு சாதகமான முடிவுகளை கல்வி இலாகா அதிகாரிகள் எடுக்கும் போதெல்லாம், அதை நடைமுறைப்படுத்த நிர்வாகிகள் மறுத்தனர். இவ் விதிகளின்படி கொடுக்கப்படும் கல்வி இலாகாவின் நியாயமான தீர்ப்புக்களை எதிர்த்து நிர்வாகிகள் உயர் நீதி மன்றத்தில் தொடுக்கும் வழக்குகளெல்லாம் 'விதிகள் சட்ட பூர்வமானதல்ல" என்ற ஏக காரணத்தால், நிர்வாகிகளுக்கே சாதகமாக தீர்ப்பளிக்கப்பட்டன. ஆசிரியர்களிடம் நியாயம்— இருந்த போதிலும், அவர்களுக்கு சாதகமான முடிவை எடுக்க 3 சட்டம் குறுக்கே நிற்பதாக சில உயர்நீதி மன்ற நீதிபதிகள் உணர்ந்தார்கள். உயர்நீதிமன்ற நீதிபதி மாண்புமிகு திரு வீராசாமி அவர்களே கல்வி அதிகாரிகளின் முடிவை நிராகரித்து அளித்த தீர்ப்பில், ஆசிரியர்கட்குப் பணி பாதுகாப்பு கொடுக்க உண்மையிலேயே அரசு விரும்பினாலே மேற்படி விதி சட்டமாவதற்கு அரசு உடனே நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று பல ஆண்டுகளுக்குமுன்பே கூறியிருக்கிறார். உதவி பெறும் ஆசிரியர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்க வேண்டுமென்ற நிர்ப்பந்தம் அரசிடம் உருவாகும் போதெல்லாம், அரசிடம் செல்வாக்கு இருக்கின்ற நிர்வாகிகள் மாநாடு நடத்தியோ கூடியோ அதைத் தோற்கடிப்பதும் அரசு அவர்கள் கோரிக்கைகளுக்கு தலைசாய்ப்பதும் தான் இதுவரையிலும் கண்டுவந்து இருக்கிறோம். ஆசிரியர் சம்பளத்தில் இருந்து நிர்வாகிகள் பணம் பிடிக்கிறார்கள். ஆகையால் தங்கள் சம்பளத்தை நேரடியாக அரசு கொடுக்கவேண்டுமென்று நாம் கேட்டோம். கூட்டணியின் இக்கோரிக்கையை ஏற்றுக்கொண்டு 1958ல் தனியார் பள்ளி ஆசிரியர்கட்கு மணியார்டர் மூலம் ஒரு வருடம் சம்பளம் நேரடியாக வழங்கினார்கள். உடனே நிர்வாகிகள் தங்கள் 'மானம்பறிபோய்விட்டது" என்று கூச்சலிட்டு வேலூரில் நிர்வாகிகள் மாநாடு ஒன்று நடத்தினார்கள். முதலமைச்சரை வரவழைத்தார்கள். மானம் பறிபோன தாக விளக்கினார்கள். நிர்வாகிகளின் நிர்ப்பந்தத்திற்கு பணிந்து சம்பளம் நேரடியாக கொடுத்த வழக்கத்தை அரசு நிறுத்தி விட்டது.

### குன்றக்குடியார் போராட்டம்

இதை எல்லாம் கண்டு அஞ்சாமல் கூட்டணி மேலும் ஆசிரியர் பாதுகாப்புச் சட்டம் கொண்டுவரவேண்டுமென இடைவிடாது நடத்திய கிளர்ச்சி ஆர்ப்பாட்டம் இவைகளின் பயனாக 1971-ல் தனியார் பள்ளிகள் 'கட்டுப்பாடு மசோதா கொண்டுவர அரசினர்வாக்களித்தனர். இருப்பினும் அதை சட்டசபையில் தாக்கல்செய்யும்படி நிர்ப்பந்தித்த தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள் 10-20 பேர் சிறைச்சாலைக்கு போகவேண்டியதாயிற்று. அவ்வாறு கொண்டு வரப்பட்ட மசோதாவை பொறுக்குக் குழுவுக்கு கொண்டு வராமலேயே சட்டசபையில் விவாதித்து நிறைவேற்றலாம் என்ற யோசனையை ஏற்றுக்கொள்ளாமல் பொறுக்குக்குழுவுக்கு விடப்பட்டது. மாதங்கள் பல ஆயினும் பொறுக்குக் குழுவிலிருந்து அதற்கு விமோசனம் கிடைக்கவில்லை. இதில் ஏன் அரசு போதுமான கவனம் செலுத்தவில்லை என வியந்திருக்கும் நேரத்தில் இப்போது குன்றக்குடி அடிகளாரே தெய்வீகப் பேரவை மகாசபை கூட்டத்தில் "இந்த மசோதாவை சட்டமாக்கக்கூடாது மீறி சட்டமாக்கினால் போராடத் தயங்கமாட்டோம்" என்று கூறியிருக்கிறார். ஏன் சட்டமாக்கக்கூடாது என்பதை அவர் விளக்கியதாகத் தெரியவில்லை. எனினும் தமிழகத்திலுள்ள ஆசிரிய பெருமக்கள் அவர்சொன்னதின் பொருளை தெட்டத் தெளிவாகத்தெரிந்திருப்பார்கள். அரசு இந்தப்பூச்சாண்டிக்குப் பயப்படாமலும் இன்றைய தயக்கத்தைத் தூக்கி எறிந்தும் ஏறக்குறைய ஒரு லட்சம் ஆசிரியர்கட்கு மட்டுமல்ல, நாட்டில்பொதுக்கல்விக்கே நன்மை விளைவிக்கும் இம்மசோதாவை உடனடியாக நிறைவேற்ற ஆவன செய்ய வேண்டும் என அரசினைக் கேட்டுக்கொள்கிறேன்.

---

## சிறை சென்ற தர்ணா வீரர்களுக்கு பாராட்டுக் கூட்டம்

பழனி, நவ. 8—

பழனித் தாலுகா (ஆயக்குடி) ஒபுளாபுரத்தில் தர்ணா வீரர்களுக்கு கடந்த 2ந்தேதி பாராட்டுப் பொதுக் கூட்டம் நடந்தது.

அக்கூட்டத்தில்விலைவாசி உயர்வை தடுக்க மார்க்சிஸ்ட் கட்சியின் யோசனைகளையும், நிலப்பிரச்னைகளை தீர்க்காத சர்க்காரின் கொள்கைகளை கண்டித்தும் இந்தியா முழுவதும் போராடும் மக்களுடன் நீங்களும் சேரவேண்டுமென்றும் வேலை இல்லாத் திண்டாட்டத்தை போக்குவதற்கு வாலிபர்கள் ஒன்றுபட்டு விவசாயிகள், தொழிலாளர்கள் போராட்டங்களுடன் சேரவேண்டுமென்றும் போலீஸ் அடக்குமுறையை கண்டித்தும், தோழர்கள் நன்மாறன், ஏ. எஸ். காளிமுத்து, எம். பழனிவேல், ஆர். விஜயன் பால்ராஜ் ஆகியோர் நீண்ட நேரம் பேசினர்.

பின். மதுரை 'தியாகி' மணவாளன் குழுவினரின் இன்னிசைக்கச்சேரி நடைபெற்றது.

---

# பெட்ரோல் மீதான வரி விதிப்பை வாபஸ் வாங்குக

## தோழர் பி.டி.ரணதிவே கண்டனம்

**பெட்ரோல், மண்ணெண்ணை மீது இந்திய அரசால் விதிக்கப்பட்டஎக்ஸைஸ் வரியைக் கண்டித்தும் அவ்வரிகளை வாபஸ் வாங்கக் கோரியும்இந்தியத் தொழிற்சங்க மையத்தின் தலைவர் தோழர் பி. டி. ரணதிவே கீழ்க்காணும் அறிக்கையை வெளியிட்டுள்ளார்.**

சர்வதேச மார்க்கெட்டில் ஏற்பட்டுள்ள எண்ணை விலை உயர்வை சாதகமாக பயன் படுத்திக்கொண்டு, பெட்ரோலுக்கும் மண்ணெண்ணைக்கும், கொடுமையான விலை உயர்வை இந்திய அரசாங்கம் ஏற்படுத்தியுள்ளது. இதனை சி ஐ டி. யூ. கடுமையாகக் கண்டிக்கிறது.

### அன்னிய கம்பெனிகளுக்கு ஆதரவு

எண்ணை இறக்குமதி செய்யும் அன்னியநாட்டின் ஏகபோக எண்ணை முதலாளிகள் இந்தியாவில் தங்களது நடவடிக்கைகளின் மூலம் ஏராளமான லாபங்களை சேமித்துக் கொண்டிருக்கிறார்கள், அவர்கள் தங்களுடைய எண்ணைப் பொருட்களை முந்திய விலைக்கு எவ்வித கஷ்டமின்றியும் விற்க முடியும் இந்திய சர்க்காரோ, லாபம் பசிகொண்ட பெரும் கம்பெனிகளை தேச உடைமையாக்குவதற்குப் பதிலாக, இந்திய மக்களைக்கொள்ளை அடிப்பதற்கு ஆதரவு தருகிறது.

அவ்வெளிநாட்டு எண்ணைக் கம்பெனிகளை தேசவுடைமையாக்கவேண்டும் என்று இந்திய மக்கள் கோரும் கோரிக்கைகளை நிராகரித்துவிட்டு இந்திய மக்களின் நலன்களுக்கு விரோதமான முறையில் அக்கம்பெனிகளை தாஜா செய்யும் கொள்கைகளை இந்திய அரசாங்கம் கடைப்பிடித்து வருகின்றது.

### வரி உயர்வு

ஒவ்வொரு வருடமும் பெட்ரோலிய உற்பத்திகள் மீது போடப்படும்எக்ஸைஸ் வரி 750 கோடி ரூபாய்க்கும் அதிகமாகும். இது 12 வருடங்களில் 7 மடங்காக கூடியுள்ளது. புதிதாகப்போடப்பட்டுள்ள எக்ஸைஸ் வரியானது அதிகவிலையை ஏற்படுத்துகிறது. இவ்வித நடவடிக்கைகள் மண்ணெண்ணை விளக்குகளையும் மோட்டார் போக்குவரத்துகளையும் நம்பியுள்ள ஏழை மக்களை கடுமையாக பாதிக்கும்.

### சி ஐ டி யூ வின் கோரிக்கை

குறைந்த விலைக்கு எண்ணைக் கொடுக்கப்பட வேண்டும் என்று கோரியடாக்சி, ஸ்கூட்டர் டிரைவர்கள் தங்களுடைய ஆர்ப்பாட்டத்தால் நியாயப்படுத்தப்பட்டுள்ளார்கள் என சி ஐ டி யூ கருதுகிறது.

பெட்ரோல்மண்ணெண்ணை ஆகியவை குறைந்த விலையில் ஏழை மக்கள் பெறக்கூடிய முறையில் எக்ஸைஸ் வரிகள் கண்டிப்பாக குறைக்கப்பட வேண்டும் என சி ஐ டி யூ கோருகிறது.

### போராட்ட அழைப்பு

மேலும், இக்கொடுமையான மக்கள் விரோத நடவடிக்கைகளை வாபஸ் வாங்கச் செய்யும் முறையில்—அரசாங்கத்தால விதிக்கப்பட்ட விலை உயர்வைஎதிர்த்து போராட முன்வருமாறு அனைத்து தொழிலாளி வர்க்கத்தினையும் மக்களையும் சி ஐ டி யூ அழைக்கிறது.

இவ்வாறு தனது அறிக்கையில் சி ஐ டி யூவின் தலைவர் தோழர் பி. டி. ரணதிவே குறிப்பிட்டிருக்கிறார்.

---

# சட்டத்தை மீறும் பிரதமர்

புதுடெல்லி நவ 12—

"ஹரிபி ஹ் டோ" புகழ் இந்திரா காந்தி சென்ற வாரத்தில் குதிரை வண்டி சவாரி செய்தது பெரிய சர்ச்சையைக் கிளப்பி விட்டுள்ளது.

நாடாளுமன்ற கட்டிடம் இருக்கும் பகுதியில் குதிரை இழுத்துச் செல்லும் டோங்கா வண்டிகளுக்கும் மாட்டு வண்டிகளுக்கும் கடந்த 26 ஆண்டுகளாகத் தடை விதிக்கப்பட்டுள்ளது. வெளிநாடுகளிலிருந்து வரும் பிரமுகர்கள் அழைத்துச் செல்லப்படும் பாதைகளில் குறுக்கும் நெடுக்குமாகச் சென்று இந்த வண்டிகள் இடைஞ்சல் உண்டு பண்ணக்கூடாது என்பதற்காக இவ்விதஒழுங்குமுறை செய்யப்பட்டுள்ளது.

பெட்ரோலுக்கு லிட்டருக்கு ஒரு ரூபாய் ஏழு காசுகள் வரி தீட்டிவிட்டு ஏழை மக்களுக்காக முதலைக் கண்ணீர் வடிக்கும் பிரதமர் இந்திரா, கார் சவாரியை துறந்து விட்டது போல் ஸ்டண்ட் அடிப்பதற்காக சட்டத்தைக்கூட மீறி நடந்துள்ளார்.

சட்டத்தின் முன் அனைவரும் ஒன்றுதவே இருக்கும் போது குதிரை வண்டி தடை செய்யப்பட்டிருக்கும் பகுதியில் இந்திரா காந்தி குதிரைவண்டி சவாரி செய்துள்ளார்.

இந்திராகாந்தி இவ்வாறு சட்டத்தைமீறி நடந்திருக்கும்போது ஏன்நடவடிக்கை எடுக்கவில்லை என்றுகேட்டு டில்லி ஜனசங்கத் தலைவர் வி கே மல்ஹோத்ரா போலீசில் புகார் கொடுத்துள்ளார்.

போலீஸ் நடவடிக்கை எடுக்காவிட்டால் கோர்ட்டில் வழக்குப்போடப்போவதாகவும் அவர் அறிவித்துள்ளார்.

இந்திராவின் ஸ்டண்டைத் தொடர்ந்து ஜனசங்கத்தலைவர் வாஜ்பாயி அடுத்த நாடாளுமன்ற கூட்டத்துக்குத்தாம் மாட்டு வண்டியில் வரப்போவதாகவும் அறிவித்துள்ளார்.

---

**நடக்க இருப்பவை**

**கோவை - நீலகிரி மாவட்ட சோஷலிஸ்ட் வாலிபர் முன்னணி கோவைநகரமாநாடு**

தேதி:- 18. 11. 73

இடம்:- கேரள சமாஜம், காந்திபுரம்.

கலந்து கொள்வோர்:-

தோழர்கள்:

என். சங்கரய்யா
கே. ரமணி
எம். பூபதி
தணிகைச்செல்வன்
கே. சி. கருணாகரன்
ஜி. காளியப்பன்

மற்றும் பல முக்கியப் பேச்சாளர்கள்.

மாலை 5 மணிக்குமாபெரும் வாலிபர் அணி வகுப்பு புறப்படும் இரவு 7 மணிக்கு காந்திபுரம் 100 அடி ரோடில் பொதுக்கூட்டம் நடைபெறும்.

அன்று இரவு 10-30 மணிக்கு மதுரை "பீபிள்ஸ் தியேட்டர்ஸ்" குழுவினர் நடிக்கும் "நெஞ்சில் ஒரு கனல்" எனும் சமூக நாடகம் கேரள சமாஜத்தில் நடைபெறும்.

⁂ ⁂ ⁂

**மணவாளன் குழு இன்னிசை கச்சேரி விபரம்**

நவ. 15 முதல் 18 வரை திண்டுக்கல் தாலுகா
" 19 மேலூர்
" 20 நிலக்கோட்டை
" 21, 22 பழனி
" 23, 24 திருமங்கலம்
" 25 சாத்தூர்
" 26, 27, 28 திருப்பத்தூர்
" 29, 30 பரமக்குடி
டிச. 4, 5 கீழையூர்

---

# அர்ச்சகர்களும் கோரிக்கைகளை கடவுளிடம் முறையிடுவதில்லை! போராடத்தான் செய்கிறார்கள்

## சென்னையில் தோழர் ஆர். உமாநாத் பேச்சு

சென்னை, நவ.12—

4—11—73-ந் தேதியன்று சென்னை பெரியார் திடலில் அகில இந்திய ரெயில்வே ஊழியர் சம்மேளனத் தலைவர் தோழர் கே பிரமசாமி தலைமையில் நடந்த மத்திய மாநில அரசு ஊழியர்கள் சிறப்பு மாநாட்டில் தோழர் உமாநாத் பேசுகையில் பிறருக்காக கடவுளிடம் வேண்டுகோள் விடுக்கும் கோவில் அர்ச்சகர்களும் தங்களது கோரிக்கைகளை கடவுளிடம் முறையிடுவதில்லை. முறையிட வேண்டியவர்களிடம் தான் முறையிடுகின்றனர் என்று கூறினர்.

இச்சிறப்பு மாநாட்டிற்கு 1000 க்கு மேற்பட்ட மத்திய மாநில அரசு ஊழியர்கள் சங்க பிரதிநிதிகள் பல மாவட்டங்களிலிருந்தும் வந்து கலந்து கொண்டார்கள். மாநாடு காலை 11 மணியளவில் துவங்கியது. பிரதிநிதிகளை வரவேற்று அகவுண்டண்ட் ஜெனரல் ஆபீஸ் அலுவலர்கள சங்கத்தைச் சேர்ந்த தோழர் கே ஏ சுந்தரம் பேசினர்,

மத்திய அரசின் 3-வது ஊதியக்குழுவின் சிபாரிசுகளை கண்டனம் செய்தும், குறைந்த பட்ச ஊதியம் மாதம் ஒன்றுக்கு ரூ 314/- என்று நிர்ணயிக்க வேண்டுமென்றும், விலைவாசி உயர்வுக்கேற்ப முழுவதுமாக ஈடு கட்டும் வகையில் பஞ்சப்படி உயர்வு நிர்ணயிக்கப்பட வேண்டுமெனவும் சங்க நிர்வாகிகளை பழிவாங்கும் கருப்பு சட்டங்களை வாபஸ் பெற வேண்டுமெனவும் மற்றும் 15 தீர்மானங்களை பிரேரித்தும் வழிமொழிந்தும் தபால் தந்தி, ஆர் எம் எஸ் சங்க ஊழியர்கள் சார்பில் தோழர் வெங்கட்ராமன், தோழர் முருகேசன். நம்மாழ்வார், பாண்டிச்சேரி ஊழியர் சம்மேளனத் தலைவர் சீனிவாசன், என் ஜி ஜி ஓ சங்க ஆக்சன் கமிட்டி சேர்மன் கூடலிங்கம், புதுக்கோட்டை என் ஜி ஜி ஓ சங்கத் தலைவர் பி சுப்ரமணியம், மற்றும் பலர் பேசினர்,

தோழர் வெங்கட்ராமன் பேசுகையில்மாநில அரசானாலும் சரி. மத்திய அரசானாலும் சரி நமது கோரிக்கைகளை போராடித்தான் பெறவேண்டுமெனவும், மாநில அரசு நல்ல அரசு என்றும், மத்திய அரசு பொல்லாத அரசு என்றும் ஒருமுகமான அரசியல் உணர்வுடன் பேசவும் செயல்படவும் கூடாதென்றும் பேசினர். அவர் பேசுகையில் பலமான கரகோஷமும் வரவேற்பும் மிகுந்ததாயிருந்தது.

திருநம்மாழ்வார்பேசுகையில், தமிழக முதல்வர் வள்ளல் என்று பேசத் துவங்கியவுடன், வள்ளல் இல்லை வள்ளல் இல்லை என ஒருமுகமாக கோஷமிட்டே அவர் பேசமுடியவில்லை. கலைஞருக்கு வால் பிடிக்காதே என கோஷமிடவே விரைவில் அவர் பேச்சை முடித்துக்கொண்டார். அவ்வப்போது அனைத்தும் மத்திய அரசை மட்டும் தாக்கிபேசிவிட்டு சில தமிழக அரசை மட்டும் புகழ்ந்து பேசும் போது பிரதிநிதிகளும் கூச்சலிட்டு அவ்வாறு ஒருமுகமாக மாநில அரசை புகழ்ந்து பேச அனுமதிக்கவில்லை.

கடைசியில் சிஐடியூ சார்பில் தோழர் உமாநாத் பேசுகையில் மாநில அரசு ஊழியர்களும், மத்திய அரசு ஊழியர்களும் பிறமாநிலங்களில் இணைந்து செயல்படுவது போல தமிழகத்திலும் ஒன்று சேர்ந்துள்ளதை பாராட்டி பேசினர். இந்த ஒற்றுமை மேன்மேலும் ஓங்கி வளர வேண்டுமென கேட்டுக் கொண்டார்.

### போராட்ட பலத்துடன் பேச்சுவார்த்தைக்குச் செல்க

மாநில அரசு ஊழியர்கள் தங்களிடையே உள்ள வேற்றுமைகளை மறந்து மத்திய அரசு ஊழியர்களுடன் சேர்ந்து பொதுவான கோரிக்கைகளுக்காக போராட முன்வரவேண்டுமெனவும், வேலை நிறுத்தம் போன்ற நேரடி நடவடிக்கைகளுக்கு தங்களை தயார் செய்து கொண்டு, அந்த பலத்தின் அடிப்படையில் தான் மத்திய அரசுடன் பேச்சுவார்த்தைக்குச்செல்ல வேண்டுமென்றும், அவ்வாறின்றி ஊழியர்களை ஒன்றுபடுத்தாமல் சிலதலைவர்கள் மத்திய அரசுடன் பேச்சுவார்த்தை நடத்துவதினால் அதனால் நமக்கு சாதகமான பலன் எதுவும் கிடைக்காது என்றும் கூறினர்,

வேலைவாங்குபவர்—வேலை செய்பவர் என்ற அடிப்படையில் செயல்பட வேண்டுமென்றும், வேலை செய்வோர் தங்கள் கோரிக்கைகளை வேலை வாங்குபவர்களிடத்தில் வைத்துத்தான் போராடவேண்டுமெனவும் கோவில் அர்ச்சகர் ஒருவரிடத்தில் ஒரு அரசு ஊழியர்சென்றும், ஊதியஉயர்வு பதவி உயர்வு வேண்டுமென கடவுளிடத்தில் ஊழியருக்காக சிபாரிசு செய்து அர்ச்சிக்கிறார். அவ்வாறு அர்ச்சிக்கும் அர்ச்சகர்களும் தங்களது குறைபாடுகளையும் கோரிக்கைகளையும் கடவுளிடத்தில்கூறுவதில்லை கோரிக்கையை நிறைவேற்றக்கூடிய அரசின் முன்பு வைத்துத்தான் போராடுகிறார்கள்.

இவ்வாறு அர்ச்சகர்களும் போராட முன்வந்ததும், அர்ச்சகர்கள் மீது நடவடிக்கை எடுப்பதாக அவர்களது பணி அத்தியாவசியமான பணி என்று கேரள அரசு அறிவித்தது. அதாவது கடவுள் விக்ரஹத்தை தினந்தோறும் குளிப்பாட்டி மாலை போடுவது ஒரு அத்தியாவசிய மான பணி என்று அறிவிக்கப்படும் அளவிற்கு அர்ச்சகர்களும் தங்களது அடிப்படை உரிமைக்காக போராட முன்வந்து விட்டனர். இன்று நாடு பூராவிலுமுள்ள உழைப்பாளிகள் விலைவாசி உயர்வினால் ஏற்பட்டுள்ள பாதிப்பை தாங்க முடியாமல் போராட தயாராகி வருகின்றனர்.

இந்நிலையில் மாநில அரசு ஊழியர்களிடையே மனஸ்தாபம் இருந்தால் இத்தருணத்தில் அவைகளை மறந்து மத்திய மாநில அரசு ஊழியர்கள் ஒருங்கிணைந்து பொதுவான தேவைக் கேற்ற குறைந்தபட்ச ஊதியம், விலைவாசி உயர்வை முழுவதுமாக ஈடு கட்டும் பஞ்சப்படி உயர்வு, மற்றுமுள்ள கோரிக்கைகளுக்காக போராடவேண்டுமென கேட்டுக் கொண்டார்.

இம்மாநாட்டில் என் ஜி ஜி ஓ சங்கத் தலைவர்கள ஜே எஸ் பரதன் எம் ஆர் அப்பன், சிவ இளங்கோ, வி ஆர் கோபாலகிருஷ்ணன் மற்றும் பல மாவட்ட நிர்வாகிகளும் கலந்து கொண்டனர்.

பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்ட பின்பு தபால தந்தி ஊழியர்கள் சங்க சார்பில் சந்திர சேகரன் நன்றி கூறினர்.

---

## யூகோஸ்லாவியா புதிய தூதர்

புதுடெல்லி, நவ.12—

இந்தியாவுக்கு யுகோஸ்லாவியாவின் புதிய தூதர் திரு இலிஜா டோபாலஸ்கி புதுடெல்லியில் ராஷ்டிரபதி திரு வி வி கிரியிடம் தம் நியமனப் பத்திரங்களைச் சமர்ப்பித்தார்.

---

# சிங்கை மில்லில் 'தீ'

## நிர்வாகத்தின் பொய்பிரச்சாரத்திற்கு மறுப்பு

விக்கிரமசிங்கபுரம். நவ 11—

சிங்கை ஹார்வி மில்லில் ஒரு பகுதியில் தீப்பிடித்து விட்டதாகவும், கோரிக்கைகளுக்காக உள்ளிருப்பு வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களால் தீ வைக்கப்பட்டிருக்கலாமென சந்தேகம் வரும்முறையில் மில் நிர்வாகத்தால் போலீசில் புகார் செய்யப்பட்டுள்ளது எனவும் பத்திரிகையில் செய்தி வெளியாகி உள்ளது.

மில் நிர்வாகத்தின் இந்த இழி முயற்சியை கண்டித்து மாவட்ட சி ஐ டி யூ செயலாளர் தோழர் பி சொரணம் விடுத்துள்ள அறிக்கையின் விவரம் வருமாறு:—

போராடும் சிங்கைதொழிலாளர்களால் தீ வைக்கப்பட்டிருக்கலாமென கூறுவது விஷமத்தனமானது. தொழிலாளர்களை பட்டினியால் பணியவைக்க முடியவில்லை. 8 நாள் சம்பளப் பிடித்தமும முக்கிய ஊழியர்கள் மீது சோகாஸ் நோட்டீசும் பலனளிக்கவில்லை, கட்டாய மத்தியஸ்தம் என்ற அஸ்திரம் புஸ்வானம் ஆயிற்று. போராட்டம் நியாயமானது என பொதுமக்கள் கருத்து மேலோங்குவதை தடுக்கும் நோக்கத்துடன், தொழிலாளர்கள் வன்முறையில் ஈடுபட்டுள்ளார்கள் என விஷமப் பிரச்சாரத்திற்காக இப்படி செய்யப்படும் இச்செய்கையை சிங்கை சிஐடியூ செயலாளர் என்ற முறையில் மறுப்பதோடு கண்டனமும் செய்கிறேன் தொழிலாளர்களால் பேசப்படும சில கருத்துக்களைக் கவனித்தால சில உண்மைகள் விளங்கும், தீப்பிடித்த

(4-ம் பக்கம் பார்க்க)

---

# சி. ஐ. டி. யூ. போனஸ் நன்கொடை

| | ரூ. | பை |
|---|---|---|
| முன் வகூல் | 3512 | 50 |
| திருப்பூர் டனியன் பொதுத் தொழிலாளர் சங்கம் | 300 | 00 |
| திருச்சி மாவட்ட பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம நமணசமுத்திரம் கிளை | 20 | 00 |
| மொத்தம் | 3832 | 50 |

6—11—73
மதுரை.

## ஆதித்தன் சிமெண்ட் ஆலை நிர்வாகத்தின்
# காட்டுராஜா தர்பார்
## பலவந்தமாக ராஜினமா வாங்க
# போலீஸ் உடந்தை

தாழையூத்து, நவ 11— இங்குள்ள அமைச்சர் ஆதித்தனுருக்குச் சொந்தமான "இந்தியாசிமெண்ட்" கம்பெனியில் எவ்வித தவறும் செய்யாத ஒரு தொழிலாளி மீது வயர் திருடியதாக பொய்க் குற்றம் சுமத்தி, போலீசைக் கொண்டு காட்டுமிராண்டித்தனமான தாக்குதல் நடத்தி கட்டாயமாக—வேலையிலிருந்து ராஜினமா செய்வதாக கடிதம் வாங்கியுள்ளனர்.

இந்த கொடூர நிகழ்ச்சியைக் கண்ட இவ்வட்டாரத் தொழிலாளர்களும் பொதுமக்களும் இங்குள்ள போலீஸ் ஆதித்தன் போலீசா என்ற கேள்வியை எழுப்பியுள்ளனர்.

பாதிக்கப்பட்ட தொழிலாளியான எம் ரத்தினம் ஒர்க்ஷாப் டிபார்ட்மெண்டில் பவுண்டரி ஹெல்பராக பணி புரிந்து வருகிறார். இவர் தொழிற்சங்கத்தில் முன்னணி ஊழியரும் ஆவார்.

### புகார் மனு

அவர், மாவட்ட காவல் துறை கண்காணிப்பாளருக்கு (போலீஸ் எஸ் பி) புகார் மனுவொன்றை அனுப்பியுள்ளார். தனது மனுவில் தாழையூத்திலிருக்கும் போலீஸ் நிலையத்தை சேர்ந்த சப்-இன்ஸ்பெக்டர், ஹெட்கான்ஸ்டேபிள். போலீஸ்காரர் பிச்சையா பிள்ளை ஆகியோரையும், சங்கர் நகரில் உள்ள இந்தியா சிமெண்ட் கம்பெனியைச் சேர்ந்த தலைமை வாட்ச்மேன் வீரபத்திரத் தேவர். ஜெனரல் மானேஜர், அசிஸ்டெண்ட்மானேஜர், தலைமை டைம்கீப்பர் ஆகியோரையும் எதிர் மனுதாரர்களாக குறிப்பிட்டுள்ளார்.

தனதுமனுவில் அவர்கூறியிருப்பதாவது:—

கடந்த 22—9—73-ந் தேதியன்று ஒர்க்ஷாப் டிபார்ட்மெண்டில காலை 8 முதல் 4 மணி வரைக்குமுள்ள இரண்டாவது ஷிப்டில் நான் வேலை பார்த்துக் கொண்டிருந்தேன்.

அன்று பகல் 1-30 மணியளவில் தாழையூத்து போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர், ஹெட்கான்ஸ்டேபிள், வாட்ச்மேன் வீரபத்திரப் பிள்ளை ஆகிய நால்வரும் என்னிடம் வந்து தங்களைப் பின் தொடர்ந்து வருப்படி அழைத்தனர்.

அழைப்பதற்கான காரணத்தை நான் கேட்டதற்கு அவர்கள் முறையான பதில் எதுவும் கூறவில்லை. எனவே இது குறித்து சூபர்வைசர் திருநிகோவூசிடம் புகார் செய்தேன். அதற்கு, அவர்களுடன் சென்று வரும்படி அவர் சொன்னார்.

### பொய்குற்றச்சாட்டுகள்

என்னை தாழையூத்து காவல் நிலையத்துக்கு அழைத்துச்சென்று, கம்பெனியின் எலெக்டிரிகல் டிபார்ட்மெண்ட் வயர்திருடு போனது பற்றி சப்-இன்ஸ்பெக்டர் ஹெட்கான்ஸ்டபிளும் என்னிடம் கேட்டனர். இதைக்கேட்டு ஆச்சரியமுற்றநான், திருடு போனது பற்றி தனக்கு எதுவும் தெரியாது என்று கூறினேன். ஆனல் நான் தான் திருடினதாக ஒத்துக் கொள்ள வேண்டும் என்று கூறி என்னை மிரட்டினர். ஆனல் நான் அதற்கு இணங்கவில்லை. அதன் பிறகு சட்ட விரோதமாக நான்லாக்-அப்பில் அடைக்கப்பட்டேன்.

29–9—73-ந் தேதியன்று லாக்கப்பிலிருந்து என்னை வெளியே கொண்டு வந்து திருடியதாக ஒப்புக்கொள்ளும்படி சப்-இன்ஸ்பெக்டர் என்னை பயமுறுத்தினர், நான் உறுதியாக மறுத்தேன், காலை 11 மணியளவில் சப்-இன்ஸ்பெக்டரும் போலீஸ்காரர் பிச்சையா பிள்ளையும் லத்தியால் என்னை 17 தட்வை காட்டுமிராண்டிததனமான முறையில் அடித்து நொறுக்கினர், இக்கொடூரமான தாக்குதலால் சுயஉணர்வு இழந்தேன். மீண்டும் நான் சுயநினைவு பெற்றபோது மீண்டும் லாக்-அப்பில் இருந்தேன் நான் சுய உணர்வற்றிருந்த போது வெள்ளைத் தாளில் என் கைரேகையையும் கையெழுத்தும் பெற்றிருப்பதாக அறியவந்தேன்.

போலீசார் இவ்வளவு செய்த பிறகும் கூட என்னை விடுதலை செய்யாது மீண்டும் லாக்-அப்பில் அடைத்தனர்.

3—10—73-ந் தேதியன்று போலீஸ்காரர் பிச்சையா பிள்ளையும் வாட்ச்மேன் வீரபத்திரத் தேவரும் என்னை கம்பெனி ஜெனரல் மானேஜர், அசிஸ்டெண்ட் மானேஜர், தலைமை டயம் கீப்பர் ஆகியோரிடம் கொண்டு வந்தனர்.

ஜெனரல்மேனேஜரும்உதவி மேனேஜரும் என்னை கண்டபடி திட்டினர்கள். வேலையிலிருந்து ராஜினமாக் கடிதம் கொடுக்க வேண்டும் என்றும் மறுத்தால் கடுமையான நடவடிக்கை எடுப்போம் என்றும் பயமுறுத்தினர்கள். பயமுறுத்தலுக்கும் பலவந்தத்திற்கும் மத்தியில், வேறு வழியின்றி நான் ராஜினமாக்கடிதம் எழுதும்படி நிர்பந்திக்கப்பட்டேன்.

தலைமை டைம்கீப்பர் என்னிடம் பேனவும் வெள்ளைப்பேப்பரும், கொடுக்க போலீசாரின் உதவியுடன் என்னிடம் ராஜினமாக் கடிதம் பெற்றனர்.

### மீண்டும் லாக்-அப்

அதன்பின் மீண்டும் நான் போலீஸ் நிலையம் கொண்டு வரப்பட்டு லாக்—அப்பில் அடைக்கப்பட்டேன்.

6) 6—10—73 எம், டி. டி 8338 எஸ். இண்டியா சிமெண்ட்ஸ் கம்பெனி லிமிடெட் ஜீப் காவல் நிலையத்திற்கு முன்பு நின்றுகொண்டிருந்தது, சில தொலைபேசி தொடர்பு கருவிகளும் அந்த ஜீப்பில் இருந்தன, சப்இன்ஸ்பெக்டர்கள், தலைமைப் போலீஸ்காரர்- பிச்சையா பிள்ளை போலீஸ், வாட்ச்மேன் வீரபத்திரத்தேவர் மற்றும் ஒரு போலீஸ்காரர் ஆகியோரால் பலவந்தமாக ஜீப்பில் ஏற்றப்பட்டேன் அந்த ஜீப் திருநெல்வேலி சப்-மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டிற்குச் சென்றது,

நான் சப்-மாஜிஸ்திரேட்டால் ரிமாண்டில் வைக்கப்பட்டேன். நான் சப்-மாஜிஸ்திரேட் அவர்கள் முன்னிலையில் என் கருத்தை விளக்க முயற்சித்தேன்.ஆனல்நான் எதுவும் பேசப்படாதபடி பயமுறுத்தப் பட்டேன்.

### 6-ந் தேதிதான் ஜாமீனில் விடுதலை

7, நான் உடல் வலியாலும் உள்ள நோவாலும் ஆற்றுணத் துன்பமெய்தினேன். நான் 6-ஆம் தேதியன்றே பெயிலில் வெளி வந்தேன். இருந்தும், என்னல் சரியான முறையில் எல்லா இடங்களிலும செயல்பட முடியவில்லை. அதாவது, இந்த நேரத்தில் மேல் அதிகாரிகளிடம் ஒரு மனுக் கூட கொடுக்க முடியாத நிலையில் உள்ளேன்.

நான் என்னுடையகடந்த 10 ஆண்டு காலச் சேவையில் எந்த ஒரு கிரிமினல் குற்றததிலும் ஈடுபட்டது கிடையாது. எனவே, இவ்வளவு பெரிய அளவிற்கு சட்ட விரோதமான சிறைத் தண்டனைக்கும் பிறகு என்னை தப்பான வழியில் குற்றவாளியாக்கி வழக்குத் தொடுத்திருப்பதோடு, போலீசாரும், நிர்வாகமும் சேர்ந்து மிரட்டி சட்ட விரோதமாக என்னிடமிருந்து ராஜினமாக் கடிததத்தையும் பெற்றுள்ளனர்.

எனனுடைய இந்த வேண்டுதலையும் பிராது தார்களின் மனுக்களையும் கனம் நீதிபதி அவர்கள் சரியாக விசாரணை செய்து நீதி வழங்கும்படி தாழ்மையுடன் வேண்டிக்கொள்கிறேன்.

இந்த மனுவின் நகல்கள் மாநிலத் தலைமைப் போலீஸ் அதிகாரி, (சென்னை) மாநிலத் துணைத் தலைமைப் போலீஸ் அதிகாரி (மதுரை) நெல்லை மாவட்ட ஆட்சித் தலைவர் ஆகியோருக்கு அனுப்பப்பட்டுள்ளன.

### ஜெனரல் மனேஜருக்கு

இதே போன்று, போலீசை வைத்து பயமுறுத்தி பலாத்காரமாக நிர்ப்பந்தித்து தன்னிடமிருந்து வாங்கப்பட்ட ராஜினமாக் கடிதத்தை தன்னிடம் திருப்பித்தரக் கோரி கம்பெனியின் ஜெனரல் மேனேஜருக்கு ஒரு மனுவை எம். ரத்தினம் அனுப்பியுள்ளார்.

---

## எதிர்க் கட்சித் தலைவர்கள் மீது
# பயங்கர தாக்குதல்

பாட்ன, நவ 5— கோசி அணைகட்டுத்திட்ட ஊழலைக் கண்டிப்பதற்காக பீர்பூர் என்ற இடத்தில் எதிர்க் கட்சிகள் நடத்திய கூட்டத்தில் ஆயுத மேந்திய காங்கிரஸ் குண்டர்கள் பயங்கரத்தாக்குதல் தொடுத்தனர்.

கூட்டம் நடக்கு முன்பே இந்த ஊழலில் சம்பந்தப்பட்டிருக்கும் மத்திய அமைச்சர் எல் என் மிஸ்ரா குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் காங்கிரஸ் குண்டர்களும் மேடையைக் கைப்பற்றிக் கொண்டனர்.

சோஷலிஸ்ட் கட்சித் தலைவர் கர்பூரி தாகூர் உள்ளிட்ட 7 எதிர்க்கட்சித் தலைவர்கள் காங்கிரஸ் குண்டர்களால் தாக்கப்பட்டனர்.

---

## சிங்கை மில்லில்...

3-ம் பக்கத் தொடர்ச்சி

தாக கூறும் நாள் திங்கட் கிழமை அதிகாலை 5 மணி. வேலை ஆரம்பம் 7 மணிக்குத்தான், அந்த நேரத்தில் உள்ளிருப்பு வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டவர்கள் யாரும் கிடையாது,

### நஷ்டமோ ரூ. 200

கம்பெனியின் அதிகாரிகளும், காவலர்களும்தான் அந்த நேரத்தில் உள்ளேயிருந்தார்கள், பலமான கட்டுக்காவல். மீறியோ, 3 ஆள் உயரத்தில் உள்ள சுவரைத் தாண்டியோ யாரும் போகமுடியாது. தீப்பிடித்தபகுதியுமசுவர்ஓரதது பகுதி அல்ல. மததிய பகுதி மின்சாரக்கோளாறு காரணமாக தீப்பிடித்ததாகவும் டி வி கோண் சுமார் 4 அல்லது 5தான்எரிந்திருக்கும் அதன் மதிப்பு கூடிப் போனல் சுமார்ரூ. 200கூட வராது. என்றும் கூறப்படுகிறது. அப்படியிருக்க ரூ55 ஆயிரம் எனக் கூறிமிகைப்படுத்திமாசு கற்பிக்கிறார்கள் எனகாவலர்கள்பலராலேயே பேசப்படுகிறது,

### சொல்வதோ ரூ 55 ஆயிரம் இட்லர் பாணியில்

இந்த சம்பவங்களைப் பார்த்தால்—சட்டத்தை உருவாக்கும் சட்டமன்றத்திலேயே தீயிட்டு விட்டு, அத்தீயிட்டது பாட்டாளி வர்க்ககமும் அதன் தலைவர்களுமே என குற்றம்சாட்டிய இட்லர் தான் மறு பிறவி எடுத்து சிங்கை மில் அதிகாரிகளாக வந்திருக்கிறார்களா என ஒவ்வொரு தொழிலாளியும் சர்வசாதாரணமாகப் பேசிக்கொள்கின்றனர்.

இவ்வாறு தோழர் பி சொரணம் தமது அறிக்கையில் குறுப்பிட்டுள்ளார்.

---

## குமரி மாவட்டத்தில் தோட்டத் தொழிலாளர்கள்
# வேலை நிறுத்தம்

குலசேகரம், நவ. 7— போக்குவரத்துத் தொழிலாளர்களதுகோரிக்கையை நிறைவேற்றக்கோரி உண்ணவிரதமிருந்த மாவட்ட சி ஐ டி யூ தலைவர் தோழர் ஜே ஹேமச்சந்திரன் கைது செய்யப்பட்டதற்குக் கண்டனம் தெரிவித்து நவ 7ல் குமரி மாவட்டத்திலுள்ள அனைத்துத் தோட்டத் தொழிலாளர்களும் அடையாள வேலை நிறுத்தம் செய்தனர்.

---

## தீக்கதிர் காட்டும்...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

போராட்டத்தில் ஈடுபட்டதாக மீண்டும் மீண்டும் பேசிக் கொண்டேயிருந்தார்கள்.

நாங்கள் பார்த்தோம், சபையில் ஒரு கேள்வியைப் போட்டோம், 50 காங்கிரஸ் உறுப்பினர்களில் கோமதி சங்கரதீட்சிதர் என்ற ஒருவரைத் தவிர மற்ற 49 பேர்களில் யாராவது சுதந்திரப் போராட்டத்தில் சிறைக்குச் சென்றிருக்கிறீர்களா என்று கேட்டோம், சிறைக்குத் தான் செல்லவில்லை, வேலூர்மத்தியசிறை என்ற விளம்பரப் பலகையையாவது பார்த்திருக்கிறீர்களா? என்று ஒரு போடுபோட்டோம், அவ்வளவு தான் அத்தனைபேரும் கப்சிப் ஆகிவிட்டார்கள். அதே சமயத்தில் எங்கள் வரிசையில் இருந்த 11 பேரில் 9 பேர் சுதந்திரப் போராட்டத்தில் சிறை சென்றவர்கள்.

### காங்கிரஸ் எப்படி?

காங்கிரஸ் சட்டசபைக் கட்சிக்கு திருவாளர் கருத்திருமன் தலைவர். அவர் சிறைக்குப் போகாதவர்.

சிறைக்குச் செல்லாதவரும், காந்தியையே பார்த்திராதவருமான சஞ்சீவய்யா காங்கிரஸ் கட்சியின் அகில இந்தியத் தலைவர்.

சுதந்திரப் போராட்டத்தில் காங்கிரஸ்காரர்கள் தான் சிறை சென்றிருப்பதாகப் பெருமையடித்துக் கொள்ளும் காங்கிரஸ் காரர்களைக் கேட்கிறோம். கருத்திருமன் சஞ்சீவையா போன்றவர்களெல்லாம் காங்கிரஸ் தலைவர்களாக இருக்கிறார்களே, அதைப் பற்றி என்ன சொல்லுவீர்கள்?—என்று கேட்டோம்.

### தேசியத் தலைவர்கள் நாம்

காங்கிரஸ் இயக்கத்தில் நாம் இருந்தபோது, சுதந்திரப் போராட்டத்தில் முன வரிசையில் நின்றோம்.

மதுரையில், நகர் காங்கிரஸ் கமிட்டி நம் கையில் இருந்தது. தமிழ்நாட்டில் முககியத் தேசியத தலைவர் தோழர் பி ராமமூர்த்தி.

கேரளத்தில் தோழர்கள் இ எம் எஸ் நம்பூதிரிபாட், ஏ கே கோபாலன் ஆகியோர் காங்கிரஸ் தலைவர்கள். தோழர் இ எம் எஸ் கேரள மாநில காங்கிரஸ் கமிட்டியின் செயலாளர்,

தோழர்கள் பி சுந்தரய்யா பசவபுன்னையா முதலானவர்கள் ஆந்திர மாநிலத்தில் காங்கிரஸ் தலைவர்கள்.

இவ்வாறு இந்தியாவின் தென்பாகத்தில் சுதந்திரப் போராட்டத்தையும் சோஷலிஸ்ட் இயக்கத்தையும், இடதுசாரி இயக்கத்தையும் நாம் வளர்த்தோம்.

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த பாரம்பர்யம் உள்ளவர்கள் நாம்.

### ரோட்டரி வருகிறது

கேரளத் தோழர்கள் நமக்கு அளித்த ரோட்டரி அச்சு இயந்திரம், இப்பொழுது கோயமுத்தூரில் பழுது பார்க்கப்பட்டு வருகிறது. இன்னும் சில நாட்களில் இங்கு வந்துவிடும். அது அதிக எண்ணிக்கையில் அச்சடிக்கும்.

எனவே, தீக்கதிர் விற்பனையை அதிகரிக்க வேண்டும்.

தியாகிகளின் பேரால் நாம் நமது கட்சி வேலைகளைத் தீவிரமாக நடத்த வேண்டும் என்றார்.

---

## கூலி உயர்வுப் போராட்டத்தில் பலியான
# ஆறுமுகத்தின் இறுதி ஊர்வலம் ஆயிரக்கணக்கானேர் திரண்டனர்
## மிராசுதார்களின் கொலை வெறி கண்டு குமுறல்

நாகை, நவ 12- தஞ்சை சோமேசுவரபுரத்தில் கூலி உயர்வுப் போராட்டத்தில் முன்னணியில்நின்றதற்காக விவசாய தொழிலாளர் தோழர் ஆறுமுகம் நிலப்பிரபுத்துவ குண்டர்களால் படுகொலை செய்யப்பட்டார் அல்லவா!

6ந்தேதிதோழர்ஆறுமுகத்தின் இறுதி ஊர்வலததில் ஆயிரக் கணக்கான விவசாயத்தொழிலாளர்கள்கறுப்பு பாட்ஜ் அணிந்து கலந்து கொணடனர்.

"நிலப்பிரபுத்துவம் உள்ள வரை ரவுடிசமும் குண்டாயிசமும் இருந்து கொண்டே இருக்கும் நிலப் பிரபுத்துவம் ஒழியும் வரை—போராட்டமும் நடந்து கொண்டே இருக்கும். உடைமை வர்க்கத்தின் வன்முறையை சமாளிக்கவிவசாயத் தொழிலாளர்கள் ஓரணியில் திரண்டே ஆக வேண்டும்.

பாபநாசம் தாலுகாவில் நடந்த இந்த கொடூர கொலைக்கு பதில் கொடுக்கும் முறையில் பல்லாயிரக் கணக்கான ஆறுமுகங்கள் தோன்ற வேண்டும். இந்த மாவட்டத்தில் பாடுபடும் ஏழை மக்களுக்காக இன்னுயிர் தந்த தியாக செம்மல்களின் வரிசையில் தோழர் ஆறுமுகமும் ஒருவராகி விட்டார், ஒரு நிலப்பிரபு இறந்திருந்தால் இந்தப் பகுதியே அல்லோலப்படுத்தி இருக்கும் காவல் துறை.

ஒரு விவசாயத் தொழிலாளி நில பிரபுத்துவ நீசர்களால் கொலை செய்யப்பட்டதை அறிந்திருந்தும் ஒன்றும் நடக்காதது போல் இருக்கிறது. வருங்காலம் இதற்கு முடிவு கட்டியே தீரும்.

நமது போராட்டம் இங்கு இப்போது தான் தொடங்கி ஆறுமுகத்தின் உயிரோடு அதிவேகமாக கிளம்பிஇருக்கிறது. ஒன்று படுங்கள்; போராடுங்கள்! என்று தோழர் ஜி வீரையன், தோழர்கள என் வெங்கடாசலம் வி கே முத்துச்சாமி அறிவுறுவோன் ஆகியோர் தியாகி ஆறுமுகத்தின் சிதைக்கு தீ மூட்டிய பின் நடந்த அனுதாபக் கூட்டத்தில் பேசினர்கள்.

தோழர் உத்திரபதி தலைமை தாங்கினர், நிலப்பிரபுக்கள் ரவுடிகளை, தங்க வைத்திருந்த இடத்தையும், கொலை செய்யப்பட்ட இடத்தையும், தலைவர்கள் பார்வையிட்டார்கள். சிகப்புத் துணியால் போர்த்தி செங்கொடி பறக்க மவுன ஊர்வலம் அமைதியாக நடந்தது.

---

## தீக்கதிர் கட்டிட நிதி

ஒட்டன் சத்திரம் பரம்பலார் பொதுப்பணித்துறை தொழிலாளர்கள் சார்பாக 3—11—73-ந் தேதி தோழர் ரமணி மூலமாக தீக்கதிர் கட்டிட நிதி ரூ 5-00 அளிக்கப்பட்டது.

2—11—73 தேதிஎஸ் சின்னமணிக்கும் மீனும்பாளுக்கும், மதுரையில் நடந்த திருமணத்தின் போது தீக்கதிர் கட்டிட நிதி ரூ 10—00 அளிக்கப்பட்டது.

---

## இரண்டரை லட்சம் சணல் ஆலை தொழிலாளர் ஸ்டிரைக்

கல்கத்தா, நவ, 11— மேற்கு வங்கத்தில் 63 சணல் ஆலைகளில் வேலை செய்யும் $2\frac{1}{2}$ லட்சம் தொழிலாளர்கள் அடையாள வேலைநிறுத்தம் செய்தனர்.

கச்சா சணலுக்கு விலை நிர்ணயம், சணல் ஆலைகளை தேசிய மயமாக்குதல் உள்ளிட்ட 14 அம்சக் கோரிக்கை மீது இந்த வேலைநிறுத்தம் நடைபெற்றது.

---

## இந்திராவின் வறுமை ஒழிப்பு....

[1-ஆம் பக்கத் தொடர்ச்சி]

அமைதி வழியிலா அல்லது பலாத்கார வழியிலா என்ற கேள்வி எழுந்தது. ஆளும் வர்க்கங்கள் அமைதியான வழியில் அதிகார மாற்றத்துக்கு இணங்க மாட்டார்கள் என்பதற்கு சிலியில் நடந்திருக்கும் சம்பவமே கடைசியாக நேர்ந்துள்ள உதாரணம். புரட்சி என்பது நாடகமல்ல, மக்களுடைய தீர்ப்புக்கு கட்டுப்படாத ஆளும் வர்க்கங்களிடமிருந்து அதிகாரத்தைப் பிடுங்குவதற்கு ஜனங்களுக்கு உணர்வூட்டி போராட்டம் நடத்த வேண்டும். மக்களின் தீர்ப்புக்குக் கட்டுப்படாமல் பலாத்காரத்தைப் பிரயோகிக்கும் ஆளும் வர்க்கங்களுக்கு எதிராக போராடி அதிகாரத்தைப் பிடுங்க வேண்டும் என்ற கொள்கை மார்க்சிஸ்ட் கட்சியும் சோஷலிஸ்ட் கட்சியும் சேர்ந்து விடுத்துள்ள உடன்பாட்டில் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது.

### தமிழகத்தில்

தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் எங்கெந்தக் கட்சிகளைக் கூட்டணியில் சேர்த்துக் கொள்ள முடியும்?

ஒரு கட்சி தன்னைப்பற்றி என்ன கூறுகிறது என்பதைக் கொண்டு அந்தக் கட்சியின் தன்மையைத் தீர்மானிக்க முடியாது. அதன் நடைமுறையைக் கொண்டு தான்தீர்மானிக்க முடியும். காமராஜ் காங்கிரஸ் பெரிதாக காந்திபாரம்பரியம் பற்றி பேசுகிறது. இப்படிப் பேசுபவர்கள் காந்தி சொன்ன சுதேசியத்தை மறந்து அந்நிய முதலாளிகளிடம் கூட்டுச் சேரும் கொள்கையை ஆதரிக்கலாமா? இந்த கொள்கைதானே கருப்பு பணத்தையும், லஞ்சத்தையும் வளர்த்து விட்டுள்ளது,

இந்திரா காங்கிரசுடன் அடிப்படை வேறுபாடு இல்லாததால் இந்த இரண்டு கட்சிகளையும் எப்படியாவது ஒன்று சேர்க்க வேண்டும் என்ற முயற்சி நடைபெறுகிறது. நாடாளு மன்ற கூட்டம் தொடங்கியதும் டில்லிக்கு வரும் காமராசர் இந்திரா காந்தியைச் சந்திக்கப் போகிறாராம்.

வலது கம்யூனிஸ்ட் கட்சியைப்பொறுததவரை அதன் அடிப்படைக் கொள்கை காங்கிரசுடன் கூட்டுச்சேருவதே. ஆனல் மக்கள் போராட்டங்கள் வெடித்துக்கொண்டிருக்கும் நிலையில் அவர்களுக்குக் கஷ்டம் ஏற்பட்டுள்ளது,

### மே. வங்கத்தில்

மேற்கு வங்கத்தில் காங்கிரசில் யார் முற்போக்கு யார் பிற்போக்கு என்ற கேள்விக்கு அவர்களால் பதில்சொல்ல முடியவில்லை; அங்கு ஐ என் டி யூ சி உள்ளிட்டு எல்லா தொழிற்சங்கஸ்தாபனங்களும் கூடி தொழிற்சங்க இயக்கத்தின் மீது கட்டவிழ்த்து விடப்பட்டிருக்கும் வன்முறைக்கு அரசாங்கம் பொறுப்பைத் தட்டிக்கழிக்க முடியாது என்று தீர்மானம் நிறைவேற்றியுள்ளது, இந்த நிலையில் காலி விழுந்த ஒரு அசெம்பிளி சீட்டைக் காட்டி வலது கம்யூனிஸ்ட் கட்சியை காங்கிரஸமிரட்டுகிறது. மேற்கு வங்க பங்களாதேஷ் இடதுசாரி கட்சிகள் நிர்ணயித்திருந்த 19-ம் தேதியை 17-ம் தேதிக்கு முன் கூட்டிப் போட்டதால (ஐ என் டி யூ சியும், ஏ ஐ டி யூ சி யும் நிர்ணயித்திருந்த தேதி) அவர்களுக்கு திண்டாட்டம் ஏற்பட்டுள்ளது.

திமுக வைப் பொறுத்தவரை அவர்களுடைய மக்கள் விரோதக் கொள்கையில் எந்த மாறுதலும்ஏற்படவில்லை.

அதிமுக, இந்திரா காங்கிரஸ் சம்பந்தமாக கடைப் பிடிககும கொள்கை என்ன? அந்த கட்சி அறிவித்துள்ள கொள்கைகளை அமுலாக்குவதற்கு வழியிருக்கிறதா? அகில இந்திய ரீதியில் கூட்டுச் சேராமல் அமுல் படுத்த முடியாத கொள்கைகளை அறிவித்திருக்கும் அதிமுக எவ்வாறு இந்திரா காங்கிரசை எதிர்த்துப் போராடாமல் இருக்க முடியும்?

### மக்கள் போராட்டங்கள்

இந்த நிலைமையில் வாழ்க்கை நடத்த வழியில்லாமல் மக்களுடைய போராட்டங்கள் வெடித்துக் கொண்டிருக்கின்றன,

மார்க்சிஸ்ட் கட்சி இந்தப் போராட்டங்களை வழி நடத்திச் செல்லும் அளவுக்கு இன்னும வளரவில்லை. நாம் தான் வளரும் சக்தி, வரலாற்று கடமைகளை நிறைவேற்றும் அளவுக்கு நம் கட்சியை வளர்க்கும் பணி நம்மீது சார்ந்துள்ளது.

நாம் இந்தக் கட்டிடத்தை கட்டியிருப்பது பெரிதல்ல, எதிர்காலத்தில் நம் கட்சி வளர்ந்து வரும் நிலையில் அதன்மீது அடக்குமுறை ஏவிவிடப்படும் பொழுது ஆட்சியாளர்கள் இந்தக் கட்டிடத்தைக்கூடப் பிடுங்கிக்கொள்ளலாம், மக்களிடம் வளரும் ஆதரவுதான் நமக்கு உண்மைப் பலம்; இந்த நவம்பர் புரட்சிநாளில் நம் கட்சியை அதன் வரலாற்று ரீதியான கடமைகளை நிறைவேற்ற தக்க முறையில் வளர்ப்பதற்கான சபதத்தை நாம் ஏற்போம்.

(அதிமுக பற்றியும் திமுக பற்றியும் தோழர் ராமமூர்த்தி பேசிய விவரங்களும மற்ற தலைவர்களுடைய பேச்சுக்களும் நாளை இதழில் இடம் பெறும்.)

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், (13, முதல சந்து, வடக்கு சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.

---

## காகிதப் பணத்தின் நிலை
# ரிசர்வ் பாங்கு அறிக்கை

பம்பாய், நவ. 8— பணவீக்கம் அதிகமாக அதிகமாக, பல புதிய உண்மைகள். வெளியாகி வருகிறது. சமீபத்தில் வெளிவந்த ரிசர்வ் பாங்கு, அறிக்கையின்படி, இன்று புழக்கத்தில் உள்ள காகிதப பணத்தில், மிகவும் அதிகமான நோட்டு நூறுரூபாய் நோட்டாகும்.

பத்து ரூபாய் நோட்டுகள் கொஞ்சம் கொஞ்சமாக புழக்கத்திலிருந்து, குறைய ஆரம்பித்து விட்டது.

பத்துரூபாய் நோட்டுதான் பொதுவாக புழக்கத்திலிருந்த மதிப்பு அதிகமான நோட்டாக இருந்தது.

1966-ம் ஆண்டில் மொத்தம் புழக்கத்திலிருந்த நோட்டுக்களில் 41.2 சதம், நூறு ரூபாய் நோட்டும், 40.5 சதம, பத்து ரூபாய் நோட்டும், புழக்கததிலிருந்தது. ஆனல் அது, இப்போது, 52,5 சதம் நூறு ரூபாயும், 32.4 சதம், பதது ரூபாயும் ஆக உயர்ந்து விட்டது. 1960க்குப்பிறகு, அச்சடிக்கப்பட்ட நோட்டுகளில் நூறு ரூபாய்தான் அதிகம் இதற்கு முக்கியமான காரணம், பணத்தின் மதிப்பு வெகுவாகக் குறைந்ததும், கள்ளப்பணத்தைப் பதுக்கி நூறு ரூபாய் நோட்டு வசதியாக இருப்பதுமாகும்.

பணத்தின்மதிப்புகுறைந்துவிட்டதால், இன்று அன்றாடச் சிலவிற்குக்கூட நூறு ரூபாய் நோட்டு புழககததில் அதிகமாகி விட்டது.

மேலும், பத்து ரூபாய் நோட்டுக்குப்பதிலாக, நூறு ரூபாய் நோட்டு அச்சடிப்பதால், அரசாங்கத்திற்கு சிலவும் குறைகிறது.

கள்ள நோட்டு அடிப்பவர்களுக்கு பண வீக்கம் இப்போது மிகவும் கடினமான நிலைமையைத் தோற்றுவித்திருக்கிறது. பத்து ரூபாய் நோட்டிற்காக காகிதம, அச்சு, முதலியவைகளைத் தயாரித்து,கள்ள நோட்டு அடிப்பதில் அவர்களுக்கு, அதிகமான லாபம் கிடைப்பதில்லை.

காகிதப்பணம், அதிகமாகப் புழங்க ஆரம்பித்ததும், சில்லரை நாணயங்கள் குறையத்தொடங்கிவிட்டது. இந்த சில்லரைப் பஞ்சத்திற்குக் காரணம். பணவீக்கம், லாபநோக்கமும் ஆகும். சில்லரை நாணயத்திலுள்ள உலோகத்தை உருக்கி விற்றால், அந்த நாணயத்தின் மதிப்பைவிட அதிகமான பணம் கிடைக்கிறது. ஆகவே லாபவேட்டைக்காரர்கள், சில்லரை நாணயத்தைப் பதுக்கி, உருக்கி உலோகமாகவிற்று விடுகிறார்கள்.

---

# பொய் வழக்கில்
## தோழர்கள் உலகப்பா, சந்தானம் உட்பட 16 பேர் விடுதலை

திருமங்கலம், நவ. 13— கொலை முயற்சி செய்ததாகத் தொடரப்பட்ட வழக்கில் திருமங்கலத்தில் கட்சிச் செயலாளர் தோழர் உ. ச. உலகப்பா உட்பட 16 தோழர்களும் விடுதலை செய்யப்பட்டனர்.

திருமங்கலம் அருகே மறவங்குளத்தில் உள்ள மெட்டல் பவுடர் கம்பெனியில் தொழிலாளர் ஒன்றுபட்டு 19 அம்சக்கோரிக்கைகள் முன்வைத்து போராடினர்.

இப்போராட்டங்களை உடைக்கும் நோக்கத்தோடு திமுக அரசின் திருமங்கலம் டவுன் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரும், சர்க்கிள் இன்ஸ்பெக்டரும் முதலாளிக்கு ஆதரவாக நடந்து கொண்டனர்.

திருமங்கலம்சப்-மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில், போராட்களில் தீவிரப் பங்கெடுத்த பல தொழிலாளர் மீது 9 பொய் வழக்குகள் தொடரப்பட்டன அனைத்து வழக்குகளிலும் தொழிலாளர்கள் குற்றம் நிரூபிக்கப்படவில்லையென்று விடுதலை செய்யப்பட்டனர்:

இறுதியாக,திமுக தொழிலாளர்களை கொலை செய்ய முயற்சித்ததாக திருமங்கலம், உசிலம்பட்டி கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தாலுகா செயலாளா உ ச உலகப்பா, கப்பலூர் சி ஐ டி யூ தலைவர் சந்தானம தொழிற் சங்கத் தலைவர் தவுடன், இ பாண்டிஉட்பட 16 பேர் மீது வழக்கு தொடரப்பட்டது.

இந்த வழக்கு திருமங்கலம் சப்-மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் விசாரிக்கப்பட்டு மதுரை அடிசனல் செஸன்ஸ் கோர்ட்டுக்கு கமிட் செய்யப்பட்டது.

மதுரை கோர்ட்டில் விசாரணை செய்யப்பட்டு 5—11—73-ந் தேதியன்று மதுரை அடிசனல் செஸன்ஸ் நீதிபதி திரு, ராமச்சந்திரன் அனைவரையும் விடுதலை செய்து தீர்ப்பளித்தார்.

சாமான்யர்களின் பிரதிநிதி என்று பரணி பாடும் கருணநிதி, தொழிலாளர் போராட்டத்தைஉடைப்பதற்காக முதலாளிக்கு பக்கமேளம்பாடி தொழிலாளர்கள் மீது பொய் வழக்குகள் போட்ட போலீஸ் அதிகாரி மீது நடவடிக்கை எடுப்பாரா? என்று திருமங்கலம் வட்டாரத்தில் தொழிலாளர்கள், மக்கள் மத்தியில் கேள்வி எழுப்பப்படுகிறது.